4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 9 5 73 புதன் (மலர் 107

## குமரி மாவட்ட தோட்ட தொழிலாளர் பொதுவேலைநிறுத்தம்

தக்கலை, மே. 9—

குமரி மாவட்ட தோட்டத் தொழிலாளரின் நியாயமான கோரிக்கைகளை அடக்கி ஒடுக்குவதற்கு போலீசாரின் அடக்குமுறை ஏவி விடப்பட்டுள்ளது.

போலீஸ் கெடுபிடிக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் முறையில் மே. 12ம் தேதி குமரி மாவட்ட தோட்டத் தொழிலாளர்களின் பொது வேலைநிறுத்தம் நடைபெறவிருக்கிறது.

## தமிழக - கேரள நதி நீர் பங்கீடு பேச்சுவார்த்தை

சென்னை, மே. 7—

தமிழகம்—கேரளம் ஆகிய மாநிலங்களுக்கிடையே ஓடும் ஆறுகளின் தண்ணீரைபயன்படுத்திக் கொள்வதுபற்றி விவாதிக்க, இரு மாநில முதலமைச்சர்களும் இம் மாத இறுதியில் சந்தித்து பேச்சு வார்த்தை நடத்துகின்றனர்.

இந்த பேச்சு வார்த்தையில் சிறுவாணித் திட்டம் பற்றி முக்கியமாக பேசப்படும்.

இவ்வாறு முதலமைச்சர் கருணாநிதி கோவையில் நிருபர்களிடம் கூறினார்.

### அவசரகால நிலைமையை திரும்பப் பெறுக

# சட்ட விரோதமாகக் காவலில் வைத்திருக்கும் கைதிகளை விடுதலை செய்க

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் அறிக்கை

புதுடில்லி, மே. 5 —

**நம் நாட்டை வேறெந்த நாடும் தாக்கும் அபாயம் இல்லை என்று பாதுகாப்பு அமைச்சரே கூறும்போது அவசர கால நிலைமையையும், விசாரணையின்றி சிறையிலடைக்க வகைசெய்யும் கருப்புச் சட்டங்களையும் ரத்து செய்யவேண்டும் என்று கோரி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர்களான தோழர்கள் ஏ. கே. கோபாலன், பி. ராமமூர்த்தி, அரிகிஷன்சிங் சுர்ஜித், மத்திய கமிட்டி உறுப்பினர் சமர் முகர்ஜி, மேற்குவங்க சட்ட உதவிக் கவுன்சிலின் கௌரவ காரியதரிசியும், சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞருமான நரநாராயண்குப்தா ஆகியோர் கீழ்வரும் அறிக்கையை விடுத்துள்ளனர்.**

உள்நாட்டு பாதுகாப்பு பராமரிப்புச் சட்டத்தின் 17 (ஏ) பிரிவு அரசியல் சட்டத்துக்கு விரோதமானது என்று சுப்ரீம்கோர்ட் தீர்ப்புக் கூறிய பிறகும் மேற்கு வங்க அரசு; அந்தச் சட்ட விதிகளின் கீழ் சிறையில் வைத்திருக்கும காவல் கைதிகளை விடுதலை செய்யும் என்று யாவரும் எதிர்பார்த்திருப்பர்.

ஆனால், விடுதலை செய்யப்பட வேண்டிய 1759 பாதுகாப்பு கைதிகள் தொடர்ந்து காவலில்வைக்கப்பட்டுள்ளனர்.

இதற்கு மேற்கு வங்க அரசு கடைபிடித்த வழி. பாதுகாப்பில் வைக்கப்பட்டுள்ளவர் மீது கிரிமினல் சட்டத்தின் கீழ் கைது செய்ய சிலகுறிப்பிட்டுள்ள குற்றத்தை சுமத்தி பாதுகாப்பில் வைப்பதை நீடித்துள்ளது.

### திடீர் குற்றச்சாட்டுகள்

மேற்கு வங்க அரசு சுமத்தியுள்ள குற்றச்சாட்டுகள் போலியானது; ஜெயிலில்பாதுகாப்பு கைதிகள் ஓராண்டு காலத்திற்கு மேல் வைகக்கப்பட்டிருந்த போது, இந்தகுற்றச்சாட்டுகளின் பேரில் எந்தகோர்ட்டிலும் வழக்குத் தொடரப்படவில்லை. உண்மைஇப்படி இருக்கும்போது, பாதுகாப்பு கைதிகள் காவலில் வைக்கப்பட்டுள்ள சட்டம் செல்லாது என்ற அறிவித்தவுடனே இந்தகுற்றச்சாட்டுகள் திடீரென எப்படி தோனறிபிருக்க முடியும்?

காங்கிரஸ் ஆட்சியாளர்கள்தாங்கள்தான்அரசியல் சட்டத்தை தூக்கிப்பிடிப்பதாக தம்பட்டமடித்துக் கொள்கிறார்களே அதன் லட்சணம் இது தான் போலும்! கைது செய்யப்பட்ட எந்த தனிநபரும் குறிப்பிட்ட குற்றத்தை செய்ததாக கூறப்பட்டால் அவரை ஒரு மாஜிஸ்டிரேட் முன்பாக நிறுத்தப்பட்டு மாஜிஸ்டிரேட் மட்டுமே கைது செய்து காவலில் வைக்கும் உத்திரவைபோட முடியும என்கிற சட்ட விதியே இங்கு மீறப்பட்டுள்ளது.

மேற்கு வங்க அரசும் மத்திய அரசும் தங்களுடைய எதேச்சதிகார ஆட்சியை ஸ்தாபிப்பதற்கு எதிர்கட்சிகளை அடக்கி ஒடுக்க எந்த அளவிற்கும் செல்லும் என்பது தெரிகிறது. எந்ததடையும் அதற்கு கிடையாது. மத்திய—மாநில அரசுகள் மக்களின் அடிப்படை ஜனநாயக உரிமைகளை மறுப்பதையும், ஒடுக்குவதையும் நாங்கள் வன்மையாக கண்டிக்கிறோம்.

காங்கிரஸ் ஆளவந்தார்கள் எவ்வளவுதான் வானளாவ ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டிருப்பதாக கூறிக் கொண்டாலும், சகல அதிகாரங்களையும் தங்கள் கையில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று துடிதுடிப்பது தெரிகிறது.

1962ம்ஆண்டில் மக்கள் சீன அரசுடன் ஏற்பட்ட சிறிய சண்டையை தொடர்ந்துபிரகடனப்படுத்தப்படுத்தப்பட்ட அவசர காலநிலைமை தொடர்ந்து பல ஆண்டுகள் நீடிக்கப்பட்டு சகலபகுதி மக்களுடைய்ஏகோபித்தவற்புறுத்தலுக்கு பின்னர்தான் வாபஸ் பெறப்பட்டது.

இன்றும் கூட பாதுகாப்பு மந்திரியின் அறிக்கைப்படியே நாட்டில் பந்தோபஸ்துக்கோ தாக்குதலுக்கோ எவ்வித முகாந்திரமுமில்லா நிலையில், மத்திய அரசு நெருக்கடி நிலைமையை நீடித்துக்கொண்டு வருகிறது.

### அமைச்சரின் நாடகம்

நெருக்கடி நிலைமைய்ய பயன் படுத்திக்கொண்டு, எதிர்கட்சிகளைச் சேர்ந்தவர்களை ஒடுக்குவதற்கும், ஜனநாயக உரிமைகளை பறிப்பதற்கும் பயன் படுத்துகிற மத்தியஅரசு, பிரிட்டிஷ் அந்நிய ஆட்சியாள பாதுகாப்புக் கைதிகளுக்குக் கொடுத்த சலுகைகளையும், வசதிகளையுமாவது அளிக்க வேண்டும் என்று மாநில அரசுகளுக்கு உத்திரவிடவில்லை. பாதுகாப்பு கைதிகள்தண்டனைவழங்கப்பட்ட குற்றவாளிக் கைதிகளை விட கேவலமாக நடத்தப்படுகிறார்கள். மத்திய உள்துறை அமைச்சர் பாதுகாப்பு கைதிகளுக்காக, அனுதாபப்படுவதுபோல் பேசுவது வெறும் நடிப்பே. இவர்களுக்கு எந்த வசதியும் அளிக்காமல் மாநிலங்களுடைய அதிகாரத்திற்குட்பட்ட விஷயம் இது என்று இரு கைகளையுய் தூக்கிவிடுகிறார்.

இவையெல்லாம் காங்கிரஸ் அரசானது, தங்களுடைய கொள்கைகளை எதிர்ப்பவர்களை எதிர்கட்சிகளை பழி வாங்கவேண்டுமென்று நினைக்கும் சர்வாதிகாரத்தை புலப்படுத்துகிறது.

எனவே ஜனநாயக எண்ணம் கொண்ட சகல பகுதியினரையும் அவசரகால நிலைமையையும், விசாரணையின்றி காவலில் வைக்கும் எல்லா சட்டங்களையும் இந்திய அரசு ரத்து செய்ய வேண்டுமென குரல் எழுப்புமாறு நாங்கள் வேண்டுகோள் விடுக்கிறோம்.

## மணல் ஆலை தொழிலாளர் மறியல்

### ஹேமச் சந்திரனுக்கு 15 நாள் காவல்

தக்கலை, மே. 7—

மணவாளன் குறிச்சி மணல் ஆலையில், லே-ஆப் நாட்களுக்கு முழுச் சம்பளம் கோரியும் விடுமுறை நாட்களுக்கு சம்பளம் நிறுத்தப்பட்டிருப்பதை எதிர்த்தும் மறியல் போராட்டம் நடைபெற்று வருகிறது.

9-வது நாளாக நடைபெற்ற மறியலுக்கு தோழர் ஹேமச் சந்திரன் தலைமை தாங்கினார்.

இன்று மறியல் செய்த தோழர்கள் நீதி மன்றத்துக்கு கொண்டு வரப்பட்டு 15-நாள் காவலில் வைக்க உத்திரவிடப்பட்டுள்ளனர்.

கடந்த 8-நாட்களாக மறியல் செய்த தோழர்களை காவலில் வைக்காமல் விட்டதற்கு மாருக, இன்று மறியல் செய்தவர்கள் சிறையில் அடைக்கப்பட்டுள்ளனர்.

### வன்முறையின் மூலம்

# திண்டுக்கல் தேர்தலில் ஜெயித்துவிட முடியாது

## தி. மு. க.வுக்கு என். சங்கரய்யா எச்சரிக்கை

மதுரை, மே. 8—

**தி மு க ஆட்சியாளர்கள் அரசாங்க அதிகாரத்தையும், வன்முறையையும் பயன்படுத்தி திண்டுக்கல் தேர்தலில் எப்படியாவது வெற்றி பெற்றுவிடலாம் என்று எண்ணுகிறார்கள். ஆனால் அது நடக்கப்போவதில்லை என்று தோழர் சங்கரய்யா எச்சரிக்கார்.**

மேலும் இன்றைக்கு எதிர்ப்பதுபோல் இந்திரா காங்கிரஸ்போன்ற பிற்போக்குக் கும்பல்களின் மக்கள் விரோதக் கொள்கைகளை என்றும் எதிர்க்க வேண்டும் என்று அ. தி. மு. க. விற்கு வேண்டுகோள் விடுத்து தோழர் என். சங்கரய்யா இங்கு மே. 6-ம் தேதியன்று நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பேசிய பேச்சின் சுருக்கம் வருமாறு:—

மின்வெட்டு

திண்டுக்கல்லில் தி.மு.க. வெற்றி பிரகாசமாகத் தெரிகிறது!

யார் அது?... ஓ... முதலமைச்சர் கருணாநிதியா?...

திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தலில் இந்திரா காங்கிரஸ், சிண்டிகேட், தி. மு. வை எதிர்த்து போட்டியிடும் மார்க்சிஸ்ட் கட்சியின் ஆதரவு பெற்ற அ. தி. மு க. வேட்பாளர் மாயத்தேவரின் வெற்றிக்காக—மார்சசிஸ்ட் கட்சியின் மதுரைக்கிளை அளிக்கும தேர்தல் நிதியளிப்புக் கூட்டத்தில்கலந்துகொள்வதில் உண்மையிலேயே பெரும் மகிழ்ச்சியடைகிறேன்.

இந்த நாடாளுமன்ற உபதோதலில் தி. மு. க. அரசு ஜனநாயக விரோதச் செயல்களில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது. தனது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்து கொண்டிருக்கிறது.

### அதிகார துஷ்பிரயோகம்

முன்னர் திலகர் திடலில் ஏப்ரல் 27-ம் தேதி நடைபெற்ற கூட்டத்திலேயே நான் குறிப்பிட்டேன். கூட்டுறவு முறையில் டாக்சி டிரைவர்களுக்காக அளிக்கப்பட்ட டாக்சிகள் திண்டுக்கல் தேர்தலுக்காக நிர்பந்தம் செய்து பயன் படுத்தப்படுகின்றன.

மேலும் இத்தொகுதி முழுவதிலும பாலம் கட்டும வேலைகளும, கிணறு வெட்டும் வேலைகளும் ஜரூராக நடந்து கொண்டிருக்கின்றன. கடந்த ஆறு வருடங்களாக இவைகளைப் பற்றிக் கவலைப்படாத தி. மு. க. அரசு இன்று மட்டும் விசேஷ கவலை கொள்வானேன்? இதனால்தான் சொன்னேன் தி. மு. க. அரசு தனது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்கிறது என்று.

உண்மையிலேயே ஜனநாயகத்தின் மீது அக்கறை இருந்தால், எனது இக் கேள்விக்கு முதலமைச்சர் கருணாநிதி பதில் கூற வேண்டும்.

### முதலமைச்சர் மௌனம் சாதிப்பதேன்?

இதைவிட மிகக் கொடுமையான சம்பவம் ஒன்று நிகழ்ந்துள்ளது.

வத்தலக்குண்டு என்ற சிற்றூரில் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் ஒன்றில் பேசி விட்டுத் திரும்பிய அ, தி. மு. க. ஊழியர் ஆறுமுகம் தி. மு. க. ரௌடிகளால் படுகொலை செய்யப்பட்டார். உள்ளத்தை உருக்கும் இந்தச சோக நிகழ்ச்சியைச் கேள்வியுற்று இன்று தமிழக மக்கள் ஆழ்ந்த கவலையுடன் நோக்குகிறார்கள்.

ஆனல், அதே சமயத்தில் தமிழக முதலமைச்சர் கருணாநிதியோ அல்லது நியாயத்திற்காக உயிர் விட்டதாக கூறப்படும் அரசனின் பெயரைக் கொண்ட நெடுஞ்செழியனே இந்தப் பயங்கரமான கொலை வெறிச்செயலைக் கண்டித்து ஒருவார்தததை கூட கூறவில்லை. கண்டித்து ஒரு அறிக்கை கூட விடுக்கவில்லை.

தி. மு. க. ஊழியர் ஒருவரே இக்கொலையைச் செய்ததாகக் கூறப்படும் போது கூட அமைதி வழி நிற்போர் ஏன் கண்டிக்கவில்லை?

அண்ணவழி நிற்போர்—ஜனநாயக மரபுக்காக நிற்போர் என்றெல்லாம் தம் பட்டம் அடித்துக் கொள்ளும் தி. மு. க. அமைச்சர்கள் ஒருவர் கூட ஏன் கண்டனம் செய்யவில்லை.

### உடனே கைது செய்க

படு கொலைகள் போன்ற வன்முறைச் செயலில் ஈடுபட்டாவது இத்தேர்தலில் எப்படியாவது வெற்றி பெற்று விடவேண்டுமென்று தி. மு. க. ஆட்சியாளர்கள் இருப்பதாகத் தானே அமைச்சர்களின் இந்த மௌனம் நமக்குக் காட்டுகிறது.

படு கொலைகள் புரிந்தாவது இத்தேர்தலில் வெற்றி பெற தி. மு. க ஆட்சியாளர்கள் எத்தனித்திருக்கிறார்கள் என்பதற்கு வத்தலக்குண்டு சம்பவம் ஒரு அறிகுறியாகும்.

இந்தப் படுபயங்கரமான அரசியல் படு கொலையை மார்க்சிஸ்ட் கட்சி வன்மையாகக் கண்டிக்கிறது, கொலைக்குக் காரணமானவர்கள் அனைவரையும் கைது செய்து சிறையில் அடைக்க வேண்டும் என்று மார்க்கிஸ்ட் கட்சி வலியுறுத்துகிறது.

### ஆளுக்கு ஒரு நீதியா?

அரசாங்க சார்பு பத்திரிக்கையான மாலைமுரசில் வந்த செய்திகளையே உங்களுக்குக் கூறுகிறேன்.

முதல் நாள் வந்த செய்தியில் வத்தலக்குண்டில் அதிமுக ஊழியர் ஆறுமுகத்தைப் படுகொலை செய்த குற்றத்திற்காக திமுக ஊழியர் ஒருவர் தேடப்பட்டுவருகிறார் என்று செய்தி வெளியிட்டிருந்தது.

ஆனல் இதைத் தொடர்ந்து மறு நாள் வந்த செயதி என்ன கூறுகிறது தெரியுமா?

ஆறுமுகம் படுகொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து திமுக தேர்தல் அலுவலகத்தை அதிமுக வினர் தாக்கியதால்

(4-ம் பக்கம் பார்க்க)

### மதுரையில் பஸ் முன் 10 ஆயிரம்

# நெசவாளர் மறியல்

## 200 பேர் கைது

மதுரை, மே, 7—

அடையாளக் கார்டுகள் மூலம் நெசவாளர்களுக்கே நேரடியாக நூல் வழங்கக் கோரியும், நூல் விலையைக் கட்டுப்படுத்தக் கோரியும் இன்றுஇங்கு சுமார் 10ஆயிரம நெசவாளர்கள் பஸ் முன் மறியல் செய்தனர், இதனால் சுமார் 1½ மணி நேரம் போக்குவரத்து தடைபட்டது,

இன்று காலை 10மணியளவில் செல்லூரிலுள்ள மதுரை ஜில்லா ஐக்கிய கைநெசவுத் தொழிலாளர் சங்கத் (சி. ஐ. டி .யூ.) திலிருந்து மோட்டா ரகத்தைச் சேர்ந்த சுமார் 10 ஆயிரம் நெசவாளர்கள்செங்கொடிகளையும், அ. தி. மு. க.. சிண்டிகேட், வலது கம்யூனிஸ்ட், இந்திரா காங்கிரஸ் கொடிகளையும் ஏற்றிக் கொண்டும் உரிமைமுழக்கங்களைஎழுப்பிக்கொண்டும் ஊர்வலமாகப் புறப்பட்டு யானைக்கல் வந்து சேர்ந்ததனர்,

அங்கு வந்தவுடன் மறியல் தொண்டர்கள் 200 பேர்கள் ரோட்டில் அமர்த்து பஸ்கள் முன்பு மறியல் செய்தனர்.

### ஆயிரம் பெணகள்

அவர்களுக்கு ஆதரவாக பல்லாயிரக்கணக்கான நெசவாளர்களும். கைக் குழந்தைகளுடன்வந்திருந்த சுமார் 100. பெண்களும் யானைக்கல்லின் நாலாபுறமும்அமர்ந்துகொண்டனர். இதனல்போக்குவரத்து அப்படியேஸ்தம்பிதததது.

இந்தமறியல்.போராட்டத்துக்கு கே. அங்கமுத்து (சி. ஐ. டி. யூ.), எஸ். எம்,, ராஜு (அ தி. மு. க. சங்கம்) பி. பட்டமுத்து, (தேசிய கைநெசவுத் தொழிலாளர் சங்கம்) வடிவேல்) வலது கம்யூ. சங்கம்) பேச்சிமுத்து (இந்திராகாங்கிரஸ் சங்கம்), ஆகியோர் தலைமைவகித்தனர்.

"நூல்விலையைக் கட்டுப்படுத்த ாவண்டும்!

அடையாளக் கார்டுகள் மூலம் நெசவாளர்களுக்கே நூல் வழங்க வேண்டும்! சட்டப் பாதுகாப்பு வேண்டும்! கம்பெனிகள் மூடப்பட்டுள்ள நாட்களுக்கு சம்பளம் வழங்க வேண்டும்!" —முதலிய கோரிக்கைகளை விண்ணதிர முழங்கினர்.

இறுதியில்,மறியல்தொண்டர்கள் 200 பேரும் போலீசாரால் கைது செய்யப்பட்டு போலீஸ் லாரிகளில் ஏற்றிச்செல்லப்பட்டனர்.

மறியல் போராட்டத்துக்கு ஆதரவளித்த அனைவருக்கும் மறியலில் கலந்து கொண்டவர்களின் சார்பாக தோழர் கே. அங்கமுத்து நன்றி தெரிவித்துப் பேசினார். தொடர்ந்து போராட்டத்தில் கலந்து கொள்ளும்படி வேண்டிக் கொண்டார்.

பின்னர், நெசவாளர்களும் பொதுமக்களும் ஊர்வலமாகப் புறப்பட்டு பழைய நகரசபைத் திடலுக்கு வந்து சேர்ந்தனர். அங்கு கே. அய்யாவு, ஏ. கணபதி ஆகியோர் போராட்ட விவரங்கள் குறித்தும், தொடர்ந்து போராட வேண்டியதன் அவசியம் பற்றியும பேசினர்.

### தி.மு.கழக எம்.எல்.ஏ.வின் விரோதப் போக்கு

மதுரை செல்லூர் பகுதியைச் சேர்ந்த 15 ஆயிரம் நெசவாளர்களும், நகர்ப் பகுதியைச் சேர்ந்த 5 ஆயிரம் நெசவாளர்களும் தங்களது வாழ்க்கைப் பிரச்னைக்காகப் போராடிக்கொண்டிருக்கின்ற இததருத்தில் பல மாஸ்டர் வீவர்கள் எவ்வித முன்னறிவிப்புமின்றி கம்பெனிகளை மூடிவிட்டனர்.

நெசவாளர்கள் அனைவரும் தங்களுக்கு நேரடியாக நூல் வழங்க வேண்டும் என்று கோரி பல கட்டப்போராட்டங்களை நடத்தி வருகின்றனர். ஆனல் மதுரை கிழக்குத்தொகுதி தி. மு. கழக சட்ட மன்ற உறுப்பினரோ, மாஸ்டர் வீவர்கள் சங்கத் தலைவர்களுடன் சேர்ந்து கொண்டு, மாஸ்டர் வீவர்களுக்குத்தான் நூல்களைத் தரவேண்டும் எனறு வலியுறுத்தி வருகிறார்.

இதனல், தி. மு. கழகத்தைச் சேர்ந்த நெசவாளர்களுட்பட அனைவரும் பெரும் அதிருப்தியும் ஆத்திரமும் அடைந்துள்ளனர். —ந-நி

### முனிசிபல் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கவனத்துக்கு

தமிழ்நாடு ஸ்தல ஸ்தாபன தொழிலாளர் சங்க பிரதிநிதிகள் கூட்டம்' ஜூன் மாதம் 9 10 தேதி, களில் சேலத்தில் நடைபெறும்.

மாநிலக்குழுக் கூட்டம் 8-6-73 காலை 10 மணிக்கு சேலம் நகரசபை சத்திரத்தில் நடைபெறும். அனைவரும் குறித்த நேரத்தில் கலந்து கொள்ளவும்.

எஸ்..ஏ. தங்கராஜன்.
செயலாளர்

### திண்டுக்கல்லுக்கு தேர்தல் கமிஷன் அதிகாரிகள் வருகை

சென்னை, மே. 7—

திண்டுக்கல் நாடாளுமன்ற உபதேர்தல் வேலைகளைக் கவனிக்க டெல்லியிலிருந்து தேர்தல் கமிஷன் அதிகாரிகள் திண்டுக்கல் வருகின்றனர். இக்குழுவினர் தேர்தல் முடியும் வரை அங்கு தங்கியிருப்பார்கள்.

இந்திய தேர்தல் கமிஷனின் உதவி தலைமை தேர்தல் அதிகாரி திரு. ஜேக்கப் தலைமையில் இக்குழுவினர் திண்டுக்கல்லில் உப தேர்தல் முடியும் வரை தங்கி கவனிப்பார்கள்.

தீக்கதிர்

# இந்திரா அரசு ஒழிப்பது எது? வறுமையா பொறுமையா?

நாட்டின் பெரும் பகுதியில் பஞ்சம் தலைவிரித்தாடும் சூழ்நிலையில் பெங்களூரில் தென் மண்டல காங்கிரஸ் மாநாடு நடந்து முடிந்துள்ளது.

"வறுமையை ஒழிப்போம்" என்ற கோஷத்தின் அடிப்படையில் ஆட்சிக்கு வந்த ஒரு கட்சி இந்த நிலைமையைப்பற்றி சிரத்தையுடன் பரிசீலித்திருக்கும் என்றும், வறட்சிப் பகுதிகளுக்கு சப்ளை போவதற்கும், மக்கள் கஷ்டங்களைத் தணிப்பதற்கும் வழிவகைகளை ஆராய்ந்திருக்கும் என்றும் யாரும் எதிர்பார்த்திருப்பர். ஆனால் அத்தகைய விவாதம் எதுவும் பெங்களூர் மாநாட்டில் நடைபெறவில்லை.

இந்த மாநாட்டில் 45 நிமிடங்கள் பிரதம மந்திரி இந்திரா காந்தி காரசாரமாகப் பேசியிருக்கிறார். அவருடைய கோபமும் சீற்றமும் நாட்டில் பஞ்ச நிலைமையைச் சிருஷ்டித்து வைத்திருக்கும் சுரண்டல் பேர்வழிகளிடம் செல்லவில்லை.

வலதுசாரி, இடதுசாரி எதிர்க்கட்சிகள்தான் அரசாங்கத்தின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு இடைஞ்சல் செய்வதாக அவர் குற்றம் சாட்டியுள்ளார்.

"வறுமையைப் போக்கும் மாபெரும் பணியையே அலட்சியப்படுத்திவிட விடியுமா" என்றும் அவர் கேள்வி கேட்டுள்ளார்.

இந்நிலையில் தன்னைப் பற்றி எதிர்க்கட்சிகள் செய்யும் அவதூறு பிரசாரத்துக்கு காங்கிரஸ்காரர்கள் சரியான பதிலடி கொடுக்க வேண்டும் என்றும் அவர் தன் கட்சிக்காரர்களைக் கேட்டுக் கொண்டுள்ளார்.

அதே சமயம் வறுமையில் உழலும் மக்களுக்கும் பிரதமர் இந்திரா பொன்னான அறிவுரை கூறியுள்ளார்.

வருடாவருடம் மருத்துவ வசதி, கல்விவசதி, போக்குவரத்து வசதி போன்றவசதிகள் தொலைதூரப் பகுதிகளுக்கெல்லாம் விரிவுபடுத்தப்பட்டு வருவதாகவும் இதனால் மக்களிடம் மேலும் அதிகம் எதிர்பார்க்கும் ஆவல் ஏற்பட்டு அரசாங்கத்தையே இப்போது கேள்வி கேட்கின்றனர் என்றும் இந்திரா பேசியுள்ளார்.

"நீங்கள் கோரிக்கை எழுப்புவது சரிதான். ஆனால் நாட்டுக்குச் செய்யவேண்டிய பொறுப்புகளை மறக்கலாமா" என்பதுதான் வறுமையில் உழலும் மக்களைப் பார்த்து இந்திரா கேட்டிருக்கும் கேள்வியாகும்.

வேலை செய்யாமல் இந்த ஆட்சியிடம் எந்த மனிதனும் எந்தச் சகாயத்தையும் எதிர்பார்க்கவில்லை. பிரதமர் இந்திராவோ இந்த நாட்டு மக்கள் தங்கள் கடமையைச் செய்யாமல் சோம்பேறிகளாக இருக்கிறார்கள் என்று குற்றம் சாட்டும் தொனியில் பேசியிருக்கிறார்.

"சிறிய கஷ்டங்களுக்காக மக்கள் பெரிய பிரச்னைகளை மறக்கலாமா" என்பதே பெங்களூர் மாநாட்டில் பேசும்போது பிரதமர் இந்திரா இந்த நாட்டு மக்களைப் பார்த்துக் கேட்டிருக்கும் கேள்வியாகும்.

இந்தியாவின் கௌரவத்தை அங்குலம் அங்குலமாக உயர்த்தும் கொள்கையை அவருடைய அரசாங்கம் பின்பற்றுவதாகவும் இதற்கு மக்கள் ஒத்துழைக்க வேண்டும் என்றும் அறிவித்துள்ளார்.

சில மாதங்களுக்கு முன் ராஜஸ்தானில் வறட்சி பிரதேசங்களைப் பார்க்கப்போயிருந்தபோது கூட கஷ்டங்களைச் சமாளித்து நிற்கும் மக்களின் மன உறுதியைப் பாராட்டுவதாகக் கூறினாரேயொழிய இந்திரா காந்தி மத்திய அரசின் சார்பில் எந்த உதவி தொகைக்கும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள மறுத்தார்.

இந்நிலையில் வறட்சி மாநிலங்களில் எல்லாம் உணவுக் "கலகங்களும்" துப்பாக்கிச் சூடுகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

இத்தகைய நிலைமையிலும் பெங்களூர் கூட்டத்தில் பேசும்போது மக்களுக்கு உடனடியாக உதவி விரைந்தனுப்பப்பட வேண்டிய அவசியத்தை அவர் உணர்த்தவில்லை.

வறட்சி நிலைமை ஆசியாவிலும், ஐரோப்பியவிலும் கூட ஏற்படுகின்றன என்றும் இந்தியவில் ஏற்பட்டிருக்கும் வறட்சி நிலைமைப் பிரச்னைகளைத் தீர்க்க விஞ்ஞானிகள் வழி கண்டுபிடிக்க வேண்டும் என்றும் அவர் பேசியுள்ளார். அதுடன் எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் மரங்களை நட்டு காடு வளர்க்க வேண்டும் என்றும் அவர் யோசனை கூறியுள்ளார்.

நாட்டின் பல பாகங்களில் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டிருக்கும் நிலைமைக்கு பிரதம மந்திரி தனுடையபேச்சில் வேறெந்த பரிகாரமும் கூறவில்லை.

இந்த நிலைமையில் கூட உருப்படியான நடவடிக்கை எடுக்க பிரதம மந்திரி இந்திராவும், அவருடைய அரசாங்கமும் முன்வரவில்லை.

"வறுமையை ஒழிப்போம்" என்ற கோஷத்தை எழுப்பிய பிரதம மந்திரி இந்திராவை மக்கள் படிப்படியாக புரிந்துகொண்டுவருவதையே பம்பாய் மாநகராட்சி தேர்தல் முடிவுகளும் பங்கா தேர்தல் முடிவும் காட்டுகின்றன. திண்டுக்கல் தொகுதியிலும் மக்கள் அவருடைய கட்சி வேட்பாளருடைய பொறுப்புத்தொகையை இழக்கச் செய்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

## சந்தையிலிருந்து கோதுமை மறைந்தமாயம்

ஜெய்ப்பூர், மே 5—

ராஜஸ்தான மாநில அரசு கோதுமை சில்லரை விலை நிர்ணயித்தும், சந்தையில் சில்லரை வியாபாரிகளிடமிருந்த கோதுமை, போன இடம் தெரியவில்லை.

அரசு நிர்ணயித்த விலை குவிண்டால் 1க்கு ரூ. 85, 91 என்றது. உற்பத்தியாளர்கள் நேரடியாக உபயோகிப்பவர்களிடம் ரூ 120 வீதம் 1000 குவிண்டால் விற்றனராம். நிர்ணயித்த விலைக்கு உணவுபண்டம் வினியோகிக்க அரசினரால் முடியவில்லை. உற்பத்தியாளர்களும், நிர்ணயித்த விலைக்கு விற்க முன் வரவில்லை.

சில்லரை வியாபாரிகள் வியாபாரத்தை நிறுத்திக் கொண்டனர் — கோதுமை உணவு மொத்த வியாபா

## ஈரோட்டில்...

(8-ம் பத்தி தொடர்ச்சி)

ளசக்கிள்கள் உட்பட ஏராளமான தோழர்கள் ஊர்வலமாகச் சென்று காதர்ஜார் மைதானத்தை அடைந்தது.

அங்குநடந்தபொதுக்கூட்டத்தில் தோழர்கள் காளியண்ணன் (மார்க்சிஸ்ட்) காசிபாளையம் பேரூராட்சி தலைவர் கே. பி. சின்னப்பன் நாராயணன் (சி ஐ டி யூ) பொன்னன் (டி ஆர் இ யூ) சே. துரைராஜ் (சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி) மற்றும் தபால் — தந்தி ரயில்வே ஓடும் தொழிலாளர் சங்கங்கள் சார்பில் பல தோழர்களும் பேசினர்.

ரத்தை அரசே ஏற்றும் மக்கள் அவதி தீர்ந்தபாடில்லை — அதிகார வர்க்கம் வைத்ததே சட்டமாகிறது.

# திண்டுக்கல் தொகுதியில் அமைச்சர்கள் சுற்றுவதேன்?

திண்டுக்கல், மே. 7—

திண்டுக்கல் வட்டத்திலும் ஆத்தூர், நிலக்கோட்டை, சோழவந்தான், திருமங்கலம், உசிலம்பட்டி ஆகிய தொகுதிகளிலும் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், அன்பில் தர்மலிங்கம், சத்தியவாணி முத்து, என். வி. நடராசன், மன்னை நாராயணசாமி ஓ. பி. ராமன், மேயர் மத்து ஆகியோர் கிராமம் கிராமமாகச் சென்று கடும் பிரச்சாரம் செய்து வருகின்றனர்.

இந்தச் செய்தி நவமணி மே. 4-ம் தேதி இதழில்வெளியாகியுள்ளது.

### காரணம் என்ன?

ஒரு நாடாளுமன்ற தொகுதியில் நடக்கும் உப தேர்தலுக்கு இத்தனை அமைச்சர் வரவேண்டிய காரணம் என்ன?

இவர்கள் சாதனைப்பட்டியலைப்பற்றி வண்ணச் சுவரொட்டிகள் அமைத்து ஊர் ஊராக ஒட்டியிருக்கிறார்களே இந்தச் சாதனைகளைப் பார்த்து மக்கள் ஓட்டுப் போட மாட்டார்களா?

மக்களாதரவில் நம்பிக்கையிருந்தால் இத்தனை அமைச்சர்கள் வருவார்களா?

### கேரளத்தில் 1957 ல் நடந்ததென்ன?

1957-ல் கேரளத்தில் இ. எம் எஸ். தலைமையிலிருந்த கம்யூனிஸ்ட் அமைச்சரவைக்கு கேரள சட்டமன்றத்தில் மூன்று ஓட்டு பெரும்பான்மைதான் இருந்தது.

என்வே தேவிகுளம் தொகுதியில் நடந்த உப தேர்தலில் கம்யூனிஸ்ட் வேட்பாளரைத் தோற்கடித்து விட்டால் இ எம் எஸ் அமைச்சரவையையே கவிழ்த்து விடலாம் என்று திட்டம் போட்டு காங்கிரசும் மற்ற பிற்போக்காளர்களும் தீவிர முயற்சிசெய்தனர்.

அந்த கடுமையானபோட்டியில் இ எம் எஸ் அமைச்சரவையைச் சேர்ந்த ஒரு அமைச்சர் கூட தேர்தல் நடைபெற்ற சமயத்தில் அந்தத் தொகுதிக்கு வரவில்லை.

### மக்கள் மேல் நம்பிக்கை

ஏனெனில் கம்யூனிஸ்ட் அமைச்சரவைக்கு மக்களிடம் நம்பிக்கை இருந்தது. தங்களுடைய சேவையை மதித்துமக்கள் ஓட்டுப்போடுவார்கள் என்று இ. எம். எஸ். அமைச்சரவை திடமாக நம்பியது, மீண்டும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வந்தபோது உபதேர்தல்கள் நடைபெறும் போது ஓட்டு வேட்டையாட அந்த கட்சியைச் சேர்ந்த அமைச்சர்கள் போனதில்லை.

ஆனால் தி மு க அமைச்சர்களுக்கு மக்களிடம் கொஞ்சமாவது நம்பிக்கையிருக்கிறதா? தங்களுடைய சேவையை மதித்து மக்கள் ஓட்டுப் போடுவார்கள் என்ற நம்பிக்கை தி மு க அமைச்சர்களுக்கு இருந்தால் திண்டுக்கல் தொகுதியையே ஒரு அமைச்சர் பாக்கியில்லாமல் வளைய வளையச் சுற்றிக் கொண்டிருப்பார்களா?

# இந்திரா கட்சியின் ஜீப் பவனியும் தி. மு. க. விளம்பரமும்

## தோழர் எஸ். ஏ. தங்கராஜ் பேச்சு

திண்டுக்கல், மே. 7—

திண்டுக்கல்லில் நடந்த மாபெரும் தேர்தல் பொதுக் கூட்டத்தில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் எஸ். ஏ. தங்கராஜன் பேசினார்.

அவர் பேசுகையில்குறிப்பிட்டதாவது:—

### இந்திரா காங்கிரஸ்

"64 மிலிட்டரி ஜீப்புகள் திண்டுக்கல்கீதாவில் சுற்றுவந்திருக்கின்றன. அதில் ஏறிச் செல்லுவதற்கு ஆட்களே இல்லை. விடுமுறைக் காலமானதால், பள்ளிச்சிறுவர்களை ஏற்றிக் கொண்டு திரிகிறார்கள்.

இந்திரா காங்கிரசுக்கு ஆட்கள் இல்லாததால், பணப் பெட்டிகளை தூக்கிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக ஓடிக் கொண்டிருக்கிறார்கள்.

கிராமங்களிலும் நகரங்களிலும் பிராமணர்களை விலை பேசி வருகிறார்கள்.

### தி. மு. க. லீலைகள்

இதுபோல் மாநில மந்திரிகளும் திண்டுக்கல் பங்களாக்களில் குடிவந்திருக்கிறார்கள். அமைச்சர்கள் பேசும்கூட்டங்களுக்குஆட்களைத் திரட்டி வருவதற்கு வெளியூர்களுக்கு லாரிகளை அனுப்பி ஆட்களைஏற்றிக்கொண்டு வருகிறார்கள்.

மின்சார அமைச்சர் ஓ. பி. ராமன் திண்டுக்கல் ரவுண்டுரோட்டிலே குடியேறிவிட்டார். மின்சார போர்டு அலுவலகத்திலிருந்த சாமான்களையெல்லாம் தேர்தல் வேலைக்கு பயன்படுத்தி வருகிறார்கள். மின்சார ஊழியர்களையும் தேர்தல் பணிகளில் ஈடுபடுத்தி வருகிறார்கள்.

### அரசு விளம்பரம்

திண்டுக்கல் நகராட்சியின் தங்கும் விடுதியில், தமிழக அரசு விளம்பர இலாகாவின் போர்டுகள் பலகைகள் ஏராளமாகக் குவிந்து விட்டன. அவையெல்லாம் தி. மு. க. தேர்தல் விளம்பர போர்டுகளாக மாறி வருகின்றன.

அமைச்சர்கள் அனைவரும் தக்கும் இலாகா சகிதமாக தேர்தல் வேலையில் ஈடுபட்டுள்ளதோடு, முனிசிபல் வேன்களும் மின்சார வேன்களும் அவர்கள் பின்னாலேயே போய்க் கொண்டிருக்கின்றன. என்று கூறி அரசு இயந்திரத்தைப்பயன்படுத்துவதைக் கண்டித்தார்.

### உயிருக்கு விலை

திண்டுக்கல்லுக்கு 6-வது மைலிலுள்ள ஜம்பிளியம்பட்டியில் தி மு க தேர்தல் ஜீப் மோதி ஒருவர் அதே இடத்தில் மாண்டார்; மற்றொருவர் மருத்துவ மனையில் மாண்டார்.

அமைச்சர் நெடுஞ்செழியன் தி. மு. க. தேர்தல் அலுவலகத்தை திறந்து வைத்த நாளில் நகர தி. மு. க. செயலாளர் பொன் சீனிவாசனுக்குச் சொந்தமான கார் மோதி, அதே இடத்தில், அண்ணாமலையார் மில் தொழிலாளி சுப்பையா மாண்டார்.

திண்டுக்கல் நகர மேட்டு ராசுப்பட்டியில் கலெக்டர் அலுவலகத்தின் முன்னால் ஓடியாடிவிளையாடிக்கொண்டிருந்த 11.வது சிறுவன் மீது எலக்ஷன் தாசில்தார் ஜீப் ஏறி, அங்கேயே சிறுவன் மாண்டான்.

தாடிக்கொம்பு ரோட்டில் பால் வியாபாரி சுப்பையா மீது வேன் ஒன்று ஏறி அங்கேயே அவர் மாண்டார்.

இதுவரையில் மொத்தம் 5பேர் செத்திருந்தும் எவரையும் கைது செய்யப் வழக்கு தொடுத்ததாக தெரியவில்லை,

ஏன் வழக்குப் போடவில்லை என்ற கேள்வி திண்டுக்கல்லில் பரவலாகவும் ஆத்திரத்துடன் கேட்கப் படுகிறது.

இதற்கு அரசாங்கம்பதில் சொன்னாலும், சொல்லாவிட்டாலும், இத்தத் தேர்தலில், வாக்காளப் பெருமக்கள் தக்க பதில் சொல்லிவிடுவார்கள் —என்று கூறி அ. தி. மு. க. வேட்பாளரின் இரட்டை இலை சின்னத்தில் வாக்களிக்குமாறு வேண்டுகோள் விடுத்தார்.

## நெசவாளர்கள் 80 பேர்கள் கைது

மதுரை, மே. 6—

மாஸ்டர் வீவர்கள் காலவரையின்றி கம்பெனிகளை மூடியதை கண்டித்தும்— தொழிலாளர் பெயருக்கு நூல் வினியோகிக்கக்கார்டு வேண்டும் என்றுகோரியும், வேலை இழந்த நாட்களுக்கு சம்பளம் வேண்டும் என்று கோரியும் மற்றும் பல கோரிக்கையை வலியுறுத்தியும் மே 6-ம்தேதி காலை கைநெசவுத் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

செல்லூர் களத்துப் பொட்டலிலிருந்து 3000 பேர்கள் ஊர்வலமாக வந்தனர். டி. மாரிமுத்து. ஏ. பி. ராஜேந்திரன், சோ. கருப்பையா ஆகிய மாஸ்டர் வீவர்கள் வீடுகளுக்கு முன் மறியலும் நடைபெற்றது.

மறியல் செய்த 80தோழர்களை போலீஸ் கைது செய்தனர்.

7—5—73 தேதி காலை 8 மணிக்கு அரசாங்க பஸ்களை மறியல்செய்யவும் சர்வ தொழிற் சங்க போராட்ட கமிட்டி முடிவு செய்துள்ளது.

கைது செய்யப்பட்ட தோழர்களைவாழ்த்தி பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் கோஷமிட்டு வழியனுப்பி வைத்தனர்.

## மே தின விழா

நாகப்பட்டினம், மே. 6—

நாகப்பட்டினத்தில் இவ்வாண்டு மே தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. முக்கிய வீதிகளும், கட்சி அலுவலகமும் செங்கொடித் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டன.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நாகை தாலுகா செயலாளர் தோழர் கே. குடும்பையன் தலைமையில் ஏராளமான தோழர்கள் ஊர்வலமாகச் சென்று மொத்தம் 10 இடங்களில் அதிர் வெடிகள் முழங்க செங்கொடிகள் ஏற்றிவைத்தனர்.

நாகூரில் தோழர் ஜி. சாம்பமூர்த்தி தலைமையில் புதிதாக இரு இடங்களில் செங்கொடிகள் ஏற்றுவிக்கப்பட்டன.

திருக்குவளை கிராமத்தில் கிளைச் செயலாளர் தோழர் என். வடிவேல் தலைமையில் கட்சித் தோழர்களும் மாதர் சங்கத் தோழர்களும் ஊர்வலமாகச்சென்று 21 இடங்களில் கொடிகள் ஏற்றப்பட்டன.

கிள்ளுக்குடியில் கிளைச் செயலாளர் தோழர் எஸ். தங்கராசு தலைமையில் 12 செங்கொடிகள் ஏற்றப்பட்டன. கடைத் தெருவில் பொதுக்கூட்டம் நடந்தது.

மாங்குடி கிளையைச் சேர்ந்த பல கிராமங்களில் கிளைச் செயலாளர் தோழர் சே. சீனிவாசன் தலைமையில் கொடியேற்றுவிழா நடந்தது

ஸ்டாலின் மன்றத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு முதலிசாத்தநல்லூர், நடுவப்பிடாகை, அகரசாத்தங்குடி தென்னவராய நல்லூர், பூதமங்களச்சேரி, கொத்தமாங்குடி, கழனிவாசல், வடகரை, தென்கரை, கருப்பங்குடி, மாங்குடி, முதலிய ஊர்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன.

இவ்விழாக்களில் ஏராளமான மாதர்களும், சிறுவர் சிறுமியரும் மாணவர்களும் கலந்துகொண்டு முழக்கம் எழுப்பி சிறப்பித்தனர்.

### வீடு வாசல்கள்

அரிவாள் சுத்தியல் நட்சத்திரங்கள் கோலங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. தெருக்கள் செங்கொடித் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன,

### ஈரோட்டில்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி. ஐ. டி. யூ. கட்சிண ரயில்வேஎம்ப்ளாயீஸ் யூனியன், இரயில்வே ஓடும் தொழிலாளர் சங்கம், மற்றும் தபால்தந்தி மின்சாரவாரியம், பீடி—சுருட்டு தொழிலாளர்களின் பக்கங்கள், சோசலிஸ்ட் வாலிபர் முன்னணித் தோழர்கள் மற்றும் இதர தோழர்களும் இந்த மே தினவிழா நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு சிறப்பித்தனர்.

ஈரோட்டில் மே தினத்தன்று ஐந்து இடங்களில் கொடி ஏற்றப்பட்டது. 30

(2-ம் பத்தி பார்க்க)

### காங்கிரஸ் அரசுக்கு மக்கள் நலனில் அக்கறையுண்டா?

# ஊமத்தை விதை கலந்த உணவை உண்பதால் வரும் தீங்கென்ன?

அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஊமத்தை விதை கலந்த மக்காசோளத்தை இந்திய அரசு மக்களுக்கு வினியோகம் செய்தது பற்றி அண்மையில் நாடெங்கும் சர்ச்சை எழுந்தது.

மக்களுடைய உடல் நலத்தில் கொஞ்சமாவது அக்கறை இருந்திருக்குமானால், ஊமத்தை விதை கலந்த மக்காசோளத்தைச் சாப்பிடுவதால் ஏற்படக்கூடிய தீங்குகள் பற்றி கொஞ்சமாவது கவலைப்பட்டிருக்குமானால், அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப் பட்ட இந்த உணவை கால்நடைகள் கூட உண்பதற்கு லாயக்கற்ற இந்த உணவை இந்திய அரசு மக்களுக்கு வினியோகித்திருக்குமா?

ஊமத்தை விதை கலந்த உணவைச் சாப்பிடுவதால் ஏற்படக்கூடியதீங்கென்ன?

மருத்தவ நூல்கள் கூறுவதைக் கீழே படியுங்கள்.—

### ஊமத்தையின் விஷத்தன்மை

ஊமத்தை அல்லது தட்டுரா என்ற செடியின் இலை, காய், விதை எல்லாமே விஷத்தன்மை வாய்ந்தவை. ஊமத்தை விதையில் ஹையோசின், ஹையசயமின், அட்ரோபின்போன்ற நச்சுக்கள் உள்ளன. தட்டுரா எனப் பொதுவாக அழைக்கப்படும் நச்சுப் பொருள், பல்வேறு நரம்புகளைச் செயலிழக்கச் செய்கிறது. கொள்ளை, திருட்டு, கற்பழிப்பு போன்ற செயல்களைச் செய்ய, வழிப்போக்கர்களை — குறிப்பாக இரயில்வே பயணிகளை முட்டாளாக்குவதற்கு இவ் விதைகள், உணவுபொருள்களுடன் கலந்தோ அல்லது சாராயம் போன்றவற்றில் கலந்தோ, செய்யக் கூடிய இந்தக் கிரிமினல் வேலையை அமெரிக்க முதலாளித்துவவாதிகள் செய்கின்றனர். 'பசுமைப்புரட்சி' கண்ட (?) இந்திராவும், தெரிந்தே அனுமதிக்கின்ற கொடுமையும் இங்குதான் நடைபெறுகிறது.

### அரைமணி நேரத்தில் நோயை கிளப்பும்

வியர்வை குறையும்! இதனால் உடலின் கழிவுப் பொருள்கள் வெளியேற முடியாது. உமிழ்நீர் சுரப்பது குறையும். ஊமத்தை நச்சு திரவ வடிவில் அல்லது டிக்காஷன் வடிவில் உட்கொண்டால் அரை மணி நேரத்தில் நோய் அறிகுறிகள் வெளிப்பட்டுவிடும்,

தொண்டை இறுக்கம் ஏற்பட்டு மூச்சுத்திணறும், குரல் மாறும் பேச்சுச் சத்தமே வெளிவராது—ஊமை போன்று பேச முடியாது. நசுக்கப்பட்டு உணவோடு உணவாய் ஆன ஊமத்தை விஷம் உடனடியாய் வாந்தியை உண்டாக்கும். வாயும் தொண்டையும் வறண்டுவிடும்; காக்கும். தொடர்ந்து கிறு கிறுப்பு, தள்ளாடிய நடை வரும்; முகம் சிவக்கும்;

கண் (விழி இணைப்படலம்) இரத்தச் சிவப்பாய் விடும் கண்மணி மிகப் பெரிதாய் விரிடையும்; இது ஆபத்தான நச்சின் உச்ச நிலையைக் குறிக்கிறது.

பார்வை மங்கும் (தூரப் பார்வை, கிட்டப் பார்வை கோளாறு) கண்தக அமையாமை வரும். சிறிதளவு வெளிச்சத்திற்குக் கூடகண் கூசும். பொருள்கள் இரண்டிரண்டாய்த் தெரியும்

தோலில் சிவப்புத் தடிப்புகள் ஏற்படும். கண்மணி உணர்வற்றுப் போவதால் சுருங்காது. 106 டிகிரிக்கு மேல் காய்ச்சல், தோல் உலர்ந்து, உரிப்பும் எரிச்சலும் ஏற்படும்.

வாய் வறண்டுவருவதால் —தொண்டைச் சதைகள் இறுகி வரவும் விழுங்க முடியாது.

### சித்த பிரமை

ஊமத்தை விஷம் உட்கொண்டவர், பரபரப்பான நிலையில், பிரமை (டெலிரியம்) பிடித்தவராய்இருப்பார். சிலர் மந்தமாயும் இருப்பார். பேச்சுகள் சம்பந்தமில்லாமல், அர்த்தமில்லாமல்தெளிவற்று பயந்த சுபாவத்துடன் இருக்கும். தன்னிலை மறந்து ஓடிப்போக முயற்சிப்பார்.

கண்முன் பல்வேறு கற்பனைப் பொருள்கள்தோன்றும். அவற்றைப் பிடிக்க முயற்சிப்பார். (ஊசியில் நூல் கோர்த்தல்; ருத்திராட்சம் உருட்டுவது போன்ற கற்பனை வாதத்தில் இருப்பார்)

### வலிப்பு மயக்கம்

நாடித்துடிப்பு அதிகரிக்கும்; போகப்போககுறையும் ஒழுங்கற்றுப்போகும். சுவாசம் முதலில் குறையும், பிறகு அதிகரித்து மூச்சுத் திணறும் (மூச்சு நாய் போன்று இளைத்தல்) அதிக அளவு ஊமத்தைவிஷத்தால் மயக்கம், வலிப்பு ஆகியவை வரும்.

### சாவு

சுவாசச் சதைகள் வாதமாகிவிடும் (செயலிழத்தல்) இருதயத்தோல் (ஹார்ட் பெய்லியர்) வருவதால் சாவு தவிர்க்க முடியாதது, சாவிலிருந்து மீண்டால் இரண்டாம் படியாய்—மறுபடியும் பிரமை நிலையில் இருப்பார்கள் மயக்க நிலையும் பிரமையும் விஷத்தின் இரு பெரும் நிலைகள். மூத்திரத்தில் நச்சுப் பொருட்களை 10-12 மணிக்குள் சோதித்துப் பார்க்க முடியும்.

பிரேத பரிசோதனை: கண்மணி விரிந்த நிலையில் இருக்கும். உடல் நிலைமாற்றம் அடையும். மூளை, நுரையீரல், மற்றும ஏனைய உறுப்புக்களில் இரத்தம் தேக்க நிலையை அடையும். உணவு குழல், இரப்பை, குடல் மற்றைய உறுப்புக்களில் சழற்சியால் மாறுபாடுகளைக் காணலாம்.

### இறக்குமதியின் பெருமைதான் என்னே!

அவ்வளவு கொடிய ஊமத்தை விதைகள் தான் கோதுமையில் கலந்து அமெரிக்காவிலிருந்து வருகிறது. சொந்தக்காலில் நிற்போம் என்று சொல்லிய இந்திரா சர்க்காரின் இறக்குமதிக் கொள்கைதான் என்னே! அதுவும் உண்ணுவதற்கு லாயக்கற்ற பொருளை இறக்குமதி செய்தார்களே, அதன் பெருமை தான் என்னே!

# லஞ்சம் தற்போது வாழ்க்கையின் பகுதியாகி விட்டது

## மராத்திய மாநில லஞ்ச ஊழல் கமிஷனரின் கண்டுபிடிப்பு

பம்பாய், மே 7—

மராத்திய மாநில அரசின் லஞ்ச ஊழல் விசாரணை கமிஷனர் பேசுகையில், இன்று லஞ்ச ஊழல் மக்கள் வாழ்வின் ஒரு பகுதியாக ஆகி விட்டது லஞ்ச ஊழல் பிரச்னை அத்தகைய அளவிற்கு வந்து விட்டது.

சமூக வாழ்வின் எல்லாப் பகுதியினரையும், வியாபாரம், தொழில், அரசியல் மற்றும் எல்லா பொது நிர்வாகங்களிலும் ஆட்டிப் படைத்து வருகிறது.

லஞ்ச ஊழலை சமூக வாழ்விலிருந்து அப்புறப் படுத்த வேண்டுமென்றால் நீண்ட நாளையதிட்டம் தேவையாம் —வளர்ந்து வரும் புதியதலைமுறையின் உள்ளத்தை தொடும் வகையில் கல்விக் கூடங்களிலிருந்து நல்ல இளைஞர்களை உருவாக்க முடியும் — லஞ்சத்தை பார்த்து இளைஞர்களுக்கு வெறுப்பு ஏற்படும் வகையில் காலேஜிலும், கல்வி கூடங்களிலும். கல்வி போதிக்கப்படவேண்டுமாம்.

### மத்திய மாநில அரசு ஊழியர்கள் கோரிக்கை

# பாண்டிச்சேரி நகரத்தை பி. 2 பிரிவாக உயர்த்துக

பாண்டி, மே 5—

பாண்டிச்சேரியில் மத்திய மாநில அரசு ஊழியர்கள் மற்றும் பொதுத் துறையை சார்ந்த 34 சங்கங்கள் கூடின மத்ப மாநில அரசு ஊழியர்கள் வாடகை ஈட்டுப்படி கூட்டிக் கொடுக்க வேண்டுமென்றும், அதற்கு பாண்டிச்சேரி நகரத்தை பி 2 நகர அந்தஸ்தாக கருதி செயல்பட வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மத்ய மாநில அரசு ஊழியர்கள் கூட்டு மன்றத்திற்கு கீழ்கண்டவர்கள் நிர்வாகிகளாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். தலைவர் டி. வில்லியம்ஸ், உதவி தலைவர் ந. சமணகிரி, தான்தோன்— பொதுச்செயலாளர் எஸ். வைத்தியநாதன். செயலாளர்களாக என். ராமச்சந்திரன், ஆர். பாலகிருஷ்ணன், பாலசுரேந்திரனும், பொருளாளர்களாக கே முருகன், ப. சதாசிவம் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

### வீரஞ் செறிந்த

# டில்லி பஞ்சாலை தொழிலாளர் போராட்டம் வெற்றி

## ரூ. 20 இடைக்கால நிவாரணம் அளிக்க முடிவு

புதுடில்லி, மே. 6—

ஏப். 11-ந் தேதி முதல் கடந்தஇருபத்திநான்குநாட்களாக, டெல்லி நூற்பாலைத் தொழிலாளர்கள் நடத்திய வீரஞ் செறிந்த வேலை நிறுத்தப் போராட்டம் வெற்றி பெற்றது.

சி ஐ டி யூ, ஐ என் டி யூ சி மற்றும் பல சங்கங்களின் அறைகூவலுக்கிணங்க தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி டில்லியிலுள்ள ஐந்து மில்களைச் சேர்ந்த 27,000 க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் 24 நாட்களாக வேலை நிறுத்தம் செய்தனர்.

வலது கம்யூனிஸ்ட் சங்கம் இந்த வேலை நிறுத்தத்தில் சேரவில்லை. எனினும் வலது கம்யூனிஸ்ட் சங்கத்தை (ஏ ஐ டி யூ சி சங்கத்தை) ஒதுக்கித் தள்ளிவிட்டு எல்லா தொழிலாளர்களும் கட்டுப்பாடாக வேலை நிறுத்தம் செய்தனர்.

பஞ்சாலைகளின் நிர்வாகங்கள் தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்க மறுத்த பிடிவாத நிலையிலிருந்து இறங்கி வர நேரிட்டது.

### அடக்குமுறை

டில்லி பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு ஆதரவாக டில்லியிலுள்ள மற்றத் தொழிற்சாலைகளைச்சேர்ந்த தொழிலாளர்கள் அனுதாப வேலைநிறுத்தம் செய்த போது கடுமையான அடக்குமுறை ஏவி விடப்பட்டது.

இந்த அடக்குமுறையையெல்லாம துச்சமாக மதித்து பஞ்சாலைத் தொழிலாளர்கள் தொடர்ந்து போராடினர்.

பின்னர் மில் அதிபர்களுக்கும், தொழிற்சங்க தலைவர்களுக்கு மிடையே பேச்சு வார்த்தை நடைபெற்றது, தொழிலாளர்கள் கோரிக்கை ஏற்கப்பட்டு ஒப்பந்தம் செய்ததால், போராட்டம்நிறுத்தப்பட்டது.

### ஒப்பந்தம்

ஒப்பந்தத்தின் அடிப்படையில் ஒவ்வொரு தொழிலாளியும் இடைக்கால நிவாரணமாக மாதம் ரூ. 20 பெறுவர். தொழிலாளர்கள் ஒவ்வொருவருக்கும் 20மாதத் தவணையில்திருப்பி அளிக்கப்படும் அட்வான்சாக ரூ. 200 தரப்படும்.

மேலும் டில்லி நூற்பாலைத் தொழிலாளர்களுக்கான பஞ்சபடி சமபந்தமாக, வைத்தியலிங்கம் என்னும் சுப்ரீம் கோர்ட் நீதிபதி, மத்தியஸ்தராக இருந்து ஆராய்வது என்பதை மில் அதிபர்களும் தொழிற்சங்கத் தலைவர்களும் ஏற்றுக் கொண்டனர்.

மேலும், அதே மத்தியஸ்தர் டில்லி நூற்பாலைத் தொழிலாளர்களுக்கான பஞ்சப்படி கொடுப்பதை கணக்கிடும் பொருட்டு, பம்பாய் தொழிலாளர்களுக்கு 1939-ல் கொடுக்கப்பட்ட அடிப்படைச் சம்பளமாகிய ரூ. 30-ஐ அடிப்படையாக வைத்துக் கொண்டால் தற்போது டெல்லி நூற்பாலைத் தொழிலாளிகளுக்கு அடிப்படைச் சம்பளம் எவ்வளவு கொடுக்கப்படவேண்டும் என்பதை ஆராய அதே மத்தியஸ்தரை அனுமதிப்பது என்பதையும் இரு சாராரும் ஏற்றுக்கொண்டனர்.

மத்தியஸ்தர் தன் முடிவை இன்னும் 4 மாதத்திற்குள் கொடுக்கவேண்டும் என்ற முடிவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

---

### பீகார் காங்கிரஸ் கமிட்டி

# தலைவர் - முதலமைச்சர் மோதல்

பாட்னா, மே. 4—

காங்கிரஸ் கட்சிக்குள் ஏற்பட்டிருக்கும் உள் சண்டை பீகார் மாநிலத்தில் முதலமைச்சரும், மாநிலக் காங்கிரஸ் கமிட்டித் தலைவரும் பகிரங்கமாக மோதிக் கொள்ளும் கட்டத்தை அடைந்துள்ளது.

பங்கா தொகுதியில் நடைபெற்ற உபதேர்தலில் காங்கிரஸ் டெபாசிட் இழக்கும் அளவுக்குத் தோற்றது காங்கிரஸ் கட்சியில் பீதியை ஏற்படுத்தியுள்ளது.

அரசு அதிகாரத்தைக் கையில் வைத்துக் கொண்டு சகல யுக்திகளையும் கையாண்டு பார்த்தும், காங்கிரஸ் வேட்பாளர் பொறுப்புத் தொகையைக் கூட வாங்க முடியாமல் தோற்றது பற்றிய நிலைமையை பீகார் மாநில காங்கிரஸ் கட்சியின் நிர்வாகக் குழு விசாரித்த போது காங்கிரஸ் தலைவர்கள் ஒருவரையொருவர் கடுமையாகத் தாக்கிப் பேசினர்.

### ஒருவருக்கொருவர் குற்றச்சாட்டு

கூட்டத்தின் துவக்கத்திலேயே பீகார் மாநிலக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் வித்யாகர் முதலமைச்சர் கேதார்பாண்டேயைத் தாக்கிப் பேசினர்,

தனக்கும் மாநில காங்கிரஸ் செயலாளர்களுக்கும் எதிராக சகுந்தலாதேவியை (பங்கா தொகுதியில் காங்கிரஸ் வேட்பாளர்) ஏவி விட்டு தாக்கி அறிக்கை விடச் செய்தது கேதார் பாண்டேதான் என்று வித்யாகர்கவி (பீகார் காங்கிரஸ் கமிட்டித்தலைவர்) குற்றம் சாட்டினர்.

இதனால் ஆத்திரமடைந்த முதலமைச்சர் பதிலடி கொடுக்க ஆரம்பித்தார்.

முதலமைச்சரும், மாநில காங்கிரஸ் கமிட்டித்தலைவரும் கடுமையாக மோதிக் கொண்டது பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

மாநிலக் கமிட்டித்தலைவர் பதவியில் இருப்பவர் பொய் பேசலாமா என்று முதலமைச்சர் ஆதரவாளர்கள் கேட்டனர்.

### தலைவர் வெளிநடப்பு

இந்தக் கட்டத்தில் மாநில காங்கிரஸ் தலைவர் கூட்டத்திலிருந்தே வெளிநடப்புச் செய்தார்.

பின்னர் அவரைச் சமாதானப்படுத்திக் கூட்டத்துக்கு அழைத்து வருவது பெரும்பாடாய்ப் போயிற்று.

திரும்பி வந்த வித்யாகர் கவி கட்சிக்குள் நாசவேலையைத் தூண்டி விட்டிருப்பது முதலமைச்சர்தான் என்று மீண்டும் குற்றம் சாட்டினர்.

பங்கா தோல்வி பற்றி விசாரிப்பதற்கு ஒரு கமிட்டியும் கூட்டத்தில் அமைக்கப்பட்டது.

---

## இந்தியாவில் 821 தினசரி பத்திரிகைகள்

புதுடெல்லி, மே. 4—

இந்தியாவில் மொத்தம் 821 தினசரிப் பத்திரிகைகள் உள்ளன.

1971-ம் ஆண்டுடன் முடிவடைந்த 5 ஆண்டுகளில் இந்தியாவில் தினசரி பத்திரிகைகளின் எண்ணிக்கை குறிப்பிடத்தக்க வகையில் 50 சத விகிதம் அதிகரித்தது. அவற்றில் பிரதிகளின் அன்றாட விற்பனை 36-7 சத விகிதம் உயர்ந்து 90 லட்சத்து 96 ஆயிரத்தை எட்டியது.

தினசரிப் பத்திரிகைகளை வெளியிடுவதில் உலகில் இந்தியா இரண்டாவது இடம் வகிக்கிறது.

1971-ம் ஆண்டில் ஆங்கிலப் பத்திரிகைகளின் விற்பனை குறைந்தது. இந்தி, தமிழ், மலையாளம, மராத்தி வங்காளி மொழிப் பத்திரிகைளின் விற்பனை அதிகரித்தது. இந்தியாவிலேயே மகாராஷ்டிராவில்தான் பத்திரிகைகளின் விற்பனை மிக அதிகம். அம்பா மாநிலத்தில் விற்பனையாகும் பத்திரிகைப் பிரதிகள் 62 லட்சம். 51 லட்சத்து 60 ஆயிரம் பிரதிகள விற்பனையாகும். தமிழ்நாடு இரண்டாவது இடம் வகிக்கிறது.

இந்தியாவிலேயே ஒரே இடத்தில் அச்சாகி வெளிவரும் தினசரி ஆனந்த பஜார் பத்திரிகை" என்னும் வங்காளிப் பத்திரிகை முதலிடம் வகிக்கிறது. 1971-ல் அதன் அன்றாட பிரதி விற்பனை 3 லட்சம்.

சஞ்சிகைகளில் இந்தியாவிலேயே குமுதம் முதலிடம் வகிக்கிறது. 1971ல் அதன் விற்பனை 3 லட்சத்து 74 ஆயிரமாகும்.

---

### தர்மபுரியில் கண்டன ஊர்வலம்

தர்மபுரி, மே. 7—

மத்திய அரசின் மூன்றுவது ஊதியக் குழுவின பரிந்துரைகளுக்குஅதிருப்தி தெரிவிக்கும் பொருட்டு அண்மையில் தர்மபுரியில அனைத்துச் சங்கங்களின் இணைப்புக் குழுவின் சார்பில் ஆர்ப்பாட்ட ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றன.

ஊர்வலத்தில் அனைத்துத் தொழிற்சங்க பிரதிநிதிகளும, உறுப்பினர்களும கலந்து கொண்டனர். பொதுக்கூட்டத்தில் பலர் பேசினர்.

---

### திண்டுக்கல் தேர்தல்

## மே. 21-ந்தேதி வாக்கு எண்ணப்படும்

மதுரை, மே. 6—

மே. 20-ந் தேதி நடைபெறுகின்ற திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி உபதேர்தலின் வாக்கு எண்ணிக்கை 21-ந் தேதி மதுரை கலெக்டர் அலுவலகத்தில் நடைபெறும்.

அன்று காலை 8 மணிக்கு வாக்கு எண்ணிக்கை தொடங்கும்.

கலெக்டர் அலுவலகத்தின் கீழேயும் மேலேயும் உள்ள 6 அறைகளில் இந்த வாக்கு எண்ணிக்கை நடைபெறும்.

இந்த நாடாளுமன்றத் தொகுதியில் உள்ள 6 சட்டமன்றத் தொகுதிகளிலும் பதிவான வாக்குகள் தொகுதி வாரியாக 6 இடங்களில் எண்ணப்படும்.

ஒவ்வொரு இடத்திலும், 14 மேஜைகள் போடப்பட்டு, ஒரு மேஜைக்கு 3 அதிகாரிகள் வீதம் 42 அதிகாரிகள் எண்ணுவார்கள்.

மொத்தம் 6 இடங்களிலும் 252 பேர் எண்ணுவர்.

---

### தர்மபுரியில் மேதின விழா

தர்மபுரி. மே. 7—

மேதினத்தன்று, தர்மபுரி, குன்னூர் கட்சி கிளையின் சார்பில் மேதினக் கொடியேற்றுவிழா நடைபெற்றது.

தர்மபுரி அன்னசாகத்தில் நகர கிளையின் சார்பில் கொடியேற்றப்பட்டது. தர்மபுரி பச்சனம்பட்டியில் செங்கொடி ஏற்றப்பட்டது.

தர்மபுரி வட்டம் மாரண்டத்திலும், ஏ. கொல்லப்பட்டியிலும செங்கொடிகள் ஏற்றப்பட்டன,

---

### மைனரிடி மக்கள் மீது தாக்குதல்

#### கலகக்காரர்களுக்கு போலீஸ் உதவி

ஷில்லாங், மே. 5—

சமீபத்தில் அசாம் மாநிலத்தில் நடந்த மொழி கலவரங்களை பற்றி ஆராய அரசினல் நியமனம பெற்ற குழு சம்பவம், நடந்த தேஜ்பூர் சென்று ஆராய்ந்த பிறகு வெளியிட்ட அறிக்கையில் கூறுவதாவது:—

51 குடும்பங்கள் வீடு இழந்தனர் பல வீடுகளும், கடைகளும், நொறுக்கப்பட்டன, சொத்துக்களை கொள்ளையடிக்கப்பட்டன.

பல இடங்களில், கலகக்காரர்கள் கொள்ளை சூறையாடல் நடத்திய போது போலீசார் செயலற்று இருந்தது மாத்திரமல்ல. சில இடங்களில் போலீசார் கலக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு கலகத்தை ஊக்குவித்துள்ளனர் என்ற குற்றசாட்டுகளும விடுத்துள்ளது. தங்களுடைய குடும்பத்தினர் அவமானப்படுத்தும் போது, படுக்கையில் இருந்த 80 வயது நோய்வாய்ப்பட்ட ஜகதிஷ்பால் என்பவர் தாக்கப்பட்டு அவர் வீடும் நாசப்படுத்தப்பட்டது.

---

### "கூலிஉயர்வு கேட்டான் அத்தான் குண்டடிபட்டு செத்தான்" என்று போஸ்டர் போட்டவர்கள் ஆட்சியில் கண்டதென்ன?

# வால்பாறை தோட்டத் தொழிலாளர் வீரவரலாறு

**காங்கிரஸ் ஆட்சியில் வால்பாறை தோட்டத் தொழிலாளர் மீது போலீஸ் நடத்திய துப்பாக்கிப் பிரயோகத்தைக் காட்டி — அந்தத் துப்பாக்கிப் பிரயோகத்தில் இறந்த தொழிலாளியின் மனைவியைக் காட்டி "கூலி உயர்வு கேட்டான் அத்தான் குண்டடிபட்டுச் செத்தான்" என்று போஸ்டர் போட்டு ஓட்டு வேட்டையாடிய கட்சி திராவிட முன்னேற்றக் கழகம்.**

**ஆனல் தி. மு. க. ஆட்சிக்கு வந்ததும் செய்ததென்ன?**

**வால்பாறை தொழிலாளர் மீது தி. மு. க. ஆட்சி காட்டுமிராண்டித்தனமான தாக்குதல் நடத்தியது. அத்தாக்குதலை எதிர்த்து தொலைதூர தோட்டக்காடுகளில் கடின வேலை செய்யும் தோட்டத் தொழிலாளர்கள் நடத்திய வீரம் செறிந்த போராட்டம் தொழிலாளி வர்க்கப்போராட்ட வரலாற்றில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கத்தக்கதாகும்.**

1972 மே 11-க்கு ஒரு வாரத்திற்கு முன்பாக சில சங்கங்கள் செய்த துரோக ஒப்பந்தத்தை தூக்கியெறிந்து விட்டு ஆனைமலைத் தோட்டத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி வேலைநிறுத்தத்தைஆரம்பித்தனர். தொழிலாளர்களது இந்த வேலை நிறுத்தப் போராட்டம் 30 நாட்கள் வெற்றிகரமாக நடந்தது. அதன் பின், முதலமைச்சர் கருணாநிதிஅளித்தவாக்குறுதியின பேரில் வேலை நிறுத்தப்போராட்டம்நிறுத்தப்பட்டது.

### வாக்குறுதி

அவர் அளித்த வாக்குறுதிதான்என்ன?"பக்கத்து மாநிலமான கேரளத்தில் என்ன சம்பளம் கொடுக்க ஒப்பந்தம் ஆகியுள்ளதோ, அதே ஒப்பந்தம தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர்களுக்கும அமுல்படுத்தப்படும்" என உறுதிமொழி அளித்தார். இதன அடிப்படையில் பேச்சு வார்த்தைகளை நடத்தியதில் இறுதி ஒப்பந்தம 1973, ஜனவரி 4-ல் ஏற்பட்டது.

வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள் தாங்கள் நடத்திய வர்க்கப் போராட்டத்தைப் பற்றி கூறும்போது,"1957-லிருந்து கூட நாங்கள் இப்படிப்பட்ட போராட்டத்தையே நடத்தியதில்லை. முன்பெல்லாம குறிப்பிட்ட ஒரு எஸ்டேட்டில் மட்டும் நடக்கும. ஆனல் இந்தப் போராட்டத்தில் எல்லாத் தோட்டங்களிலும் வேலை செய்யும் 40000 தொழிலாளர்களும் பங்கு கொண்டோம்" எனப பெருமையாகக் கூறுகின்றனர்.

### முத்தரப்புக் கமிட்டி தீர்ப்பு

முத்தரப்பு கமிட்டியின் தீர்பபைஅமுலாக்கக்கோரி ஏ. ஐ. டி. யு. சி. தலைமையில்நடநதபோராட்டத்தின் போது அடக்குமுறை அவ்வளவாக ஏவி விடப்படவில்லை.

1956-ல் முத்தரப்புகமிட்டி தனது தீர்ப்பில் ஆண்களுக்கு ஒருரூபாய் 5 அணவுக்கு பதிலாக இரண்டு ரூபாய் 4 அணவும், பெண்களுக்கு ஒரு ரூபாய்க்கு பதிலாக ஒரு ரூபாய் 12 அண கொடுக்கவும, குழந்தைகளுக்கு 10 அண 6 பைசாவுககு பதிலாக ஒரு ரூபாய் கூலியாக கொடுக்கும்படி வேறு பல அனுகூலங்களை செய்யுமாறும் தோட்ட முதலாளிகளை கேட்டுக் கொண்டு தீர்ப்பு கூறியிருந்தது.

முத்தரப்பு கமிட்டியின் தலைவர் தனது வேண்டுகோளில்,

"தொழிலின் சிறப்புக்கு அடிப்படையானது தர்மம என்றசிறந்தகொள்கையே. அதை அடிப்படையாக வைதது்க்கொண்டு இந்தப் பிரச்சினையை அணுகிஇருக்கிறேன்.

ஆகையால், இந்தத் தோட்டத் தொழில் அதிபர்கள் பெருந்தன்மையுடனும் தொண்டு உணர்வோடும் தொழிலாளர்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகளை செயல்படுத்துவதின் மூலம் வேறு பல தொழில் அதிபர்களுக்கு முன்மாதிரியாகச் செயலபடுவார்கள் என உணர்வோடு நம்புகிறேன்" என்று கேட்டுக் கொண்டார்.

இந்தத் தீர்ப்புக்கெதிராக சுப்ரீம் கோர்ட்டுச்குச் சென்று "தொடர்ச்சியான, அசாதாரணமான நிதியளிப்பு உதவிகளும், சம்பள உயர்வும், பிற வசதிகளும் தொழிலாளர்களுக்கு செய்தால், அது நாடு முழுவதிலும் உள்ள தொழில்களை எல்லாம் பாதிக்கும் வரையில் அதன் விளைவு இருக்கும்" என வாதாடிநேரத்தை வீணக்க முதலாளிகள் விரும்பவில்லை. அதற்குப் பதிலாக குறுக்கு வழியில் ஐ. என். டி. யூ. சி. தலைவர்களையும் எச். எம். எஸ்.தலைவர்களையும் கைக்குள்போட்டுக்கொண்டார்கள். இவ்விரு சங்கத்தலைவர்களும் முதரப்புக் கமிட்டியின் தீர்ப்புக்கு மாருக, ஆண்களுக்கு கூலி 1 ரூபாய் 11 அண 6 பைசாவும், பெண்களுக்கு 1 ரூபாய் 9அணவுமென்ற அடிப்படையில் கையெழுத்து போட்டு ஒப்பந்தம் செய்துவிட்டனர்.

இந்த ஒப்பந்தத்தை ஏ. ஐ. டி. யூ. சி. எதிர்த்து தொழிலாளர்களைத் திரட்டி போராட்டத்தை துவக்கியது. பொதுக் கூட்டம்நடத்துவதாக இருந்த இடத்தை நோக்கி தொழிலாளர்களின் ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. வழியில் ஒரு போலீஸ் ஸ்டேஷனை கடந்து சென்ற போது போலீசார் காலனிகளில் இருந்து கற்கள் தொழிலாளர்கள் மீது சரமாரியாக திடுதிடுப்பென்று வீசப்பட்டது. தொழிலாளர்களும் அதே காரியத்தை திருப்பிச் செய்தார்கள். அதன்பின்பு போலீஸ் ஸ்டேஷனின் பின்புறங்களில் இருந்தும் ஜன்னல் மூலமாகவும துப்பாக்கிகள் தொழிலாளிகளின் மீது தீயைக்கக்கின. ஆயுதமின்றி இருந்த தொழிலாளர்களில் நான்கு பேரின் உயிரை போலீசாரின் துப்பாக்கி கக்கிய தீ குடித்து விட்டது.

### 15 ஆண்டுகளுக்கு பின்

15 ஆண்டுகளுக்கு பின்பு ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமமாக தினக்கூலியாக ரூ 5. வேண்டும் என்றும், சம்பளத்தோடு ஞாயிற்றுக் கிழமை விடுமுறை வேண்டுமென்றும், இன்னும் வசதிகளைக்கோரி ஒரு போராட்டத்திற்கு தயாராஞர்கள். தமிழ்நாட்டின் தோட்டத் தொழிலாளிகளுக்கு தினக்கூலியாக ஆண்களுக்கு ரூ. 3-ம்பெண்களுக்கு ரூ. 2 பைசா 45-ம் கொடுக்கப்பட்டன.

ஆனல், அதே சமயத்தில் கேரளத் தோட்டங்களில் 3 ரூபாயும் 49 பைசாவும் வாங்கிக்கொண்டிருந்த தொழிலாளர்கள் பஞ்சப்படியை அதிகரிக்கும் பொருட்டு போராட்டம் நடத்திக் கொண்டிருந்தார்கள்.

ஆனைமலை தோட்டத் தொழிலாளர்களின் சரியான வழியில் சங்கமாகாத 15 சங்கங்கள் கோரிக்கையின் அடிப்படையில் ஒரே அணியில் நின்றனர். ஆனல் தி. மு. க., ஐ என் டி யூ சி. எச் எம். எஸ்., ஏ. ஐ. டி. யூ. சி. போன்ற பெரிய சங்கங்கள் என்ற திமிரில் மற்றச் சங்கங்களை உதிரிகள் என அலட்சியமாக குறிப்பிட்டனர். ஏசினர்.

### சி ஐ டி யூ போராட்டம்

ஆனல் சி ஐ டி யூ ஆனைமலை எஸ்டேட்டில இரண்டு மாதக் குழந்தையாக இருந்த போதிலும் போராட்ட காலத்தில், தொழிலாளர்களை ஒன்று திரட்டியும், அவர்களின் ஒற்றுமையைச் செழுமைப்படுத்தியும், கூர்மைப்படுத்தியும் தொழிலாளர்களை முன் நடத்திச் செல்வதில் பெருமை மிக்க பாத்திரத்தை வகித்தது.

போராட்டத்தின் குணம் பலமாகவும், வேகமாகவும இருந்ததால் பேச்சு வார்த்தைக்கான சூழ்நிலை ஏற்பட்டது. பேச்சு வார்த்தைக் கான சூழ்நிலை ஏற்பட்டது. பேச்சு வார்த்தையின் போது தொழில் அமைச்சர் 1972-ம் வருட மே மாதத்திலிருந்து டிசம்பர் வரைக்கும் நாள் ஒன்றுக்கு 15பைசா வீதமும் 1973 ஜனவரி முதல் நாள் ஒன்றுக்கு 20 பைசா அதிகரிப்பது என்ற கொள்கையை முன் வைத்தார். இதை ஐ என் டி யூ சி, தி மு க, ஏ ஐ டி யூ சி ஆகிய சங்கங்கள் தொழில் அமைச்சரின் கோரிக்கையை ஏற்றுக்கொண்டனர். ஆனல் சி ஐ டி யூ, மற்ற சிறு சங்கங்கள் எல்லாம் அமைச்சரின் இந்த யோசனையை பேச்சு வார்த்தை நடந்த இடத்திலேயே ஏற்றுக் கொள்ள முடியாதென கூறிவிட்டனர்.

அன்று இரவே, வால்பாறையில் உள்ள சிஐடியூ அலுவலகச் சுவரில் துரோக ஒப்பந்தத்தை உடைத்தெறியும் பொருட்டு போராட்டத்தை தொடர்ந்து நடத்துமாறு தொழிலாளர்களுக்கு அழைப்பு விடுத்து, கையால் எழுதப்பட்ட சுவரொட்டி ஒட்டப்பட்டது. அரைமணி நேரத்திற்குள் நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் சி. ஐ. டி. யூ. ஆபீசின் முன்பு கூடிவிட்டனர். உடனே சங்கப் பிரதிநிதிகள் வேலைநிறுத்தத்தை மே 11லிருந்து தொடருமாறு முடிவு செய்தனர்.

### புயலெனக் கிளம்பினர்

உடனே போராட்ட உணர்வு கொண்ட தொழிலாளர்களின் ஊர்வலம் புயலெனக் கிளம்பி விட்டது. எங்கே? 'பெரிய' சங்க தலைவர்கள் தன் துரோக ஒப்பந்தத்தை தொழிலாளிகளிடம எப்படி விற்பனை செய்வது என்று சதித்திட்டம் போட்டுக் கொண்டிருந்த இடத்திற்கேஊர்வலம் புறப்பட்டு விட்டது. அவர்களது சதித்திட்டத்தை தவிடுபொடியாக்கும வண்ணம் ஊர்வலமாகச் சென்ற சீற்றமிக்க தொழிலாளர்கள் "ஒன்று போராட்டத்தை தலைமைதாங்கி நடத்து அல்லது தனது பொறுப்பு மிக்க பதவியை காலிபண்ணு" என்று சீற்றதுடன் கூறினர்

எந்தத்துரோக ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டு, எந்தத்துரோக ஒப்பந்தத்தைதிற்கு கையெழுத்திட்டார்களோ. அந்தத்துரோக ஒப்பந்தத்திற்கு எதிராகவே அந்த துரோக ஒப்பந்தக்காரர்கள் கோஷமிடும் வரையும், தொடரப்போகும் போராட்டங்களுக்காக சபதம் எடுத்துக்கொள்ளும் வரையிலும, வால்பாறைத் தெருக்களின் வழியே அவர்களோடு கோஷமிட்டுவர ஆரம்பிக்கும் வரை அந்த இடத்தைவிட்டு நகல

(4-ம் பக்கம் பார்க்க)

---

### வாக்காளர் அடையாள சீட்டு

## தேர்தல் அதிகாரி விளக்கம்

மதுரை, மே. 7—

வாக்காளர் அடையாள கார்டு வினியோகம் பற்றி திண்டுக்கல் தொகுதி தேர்தல் அதிகாரி விளக்கம் தந்துள்ளார்.

இந்தக் கார்டு வினியோகத்தின் மூலம் மக்களிடம் குழப்பம் ஏற்பட்டிருப்பது பற்றியும், இந்தக் கார்டை கொண்டு வந்தால்தான் வாக்குச் சாவடிக்குள் வாக்காளர்கள் அனுமதிக்கப்படுவார்கள் என்று பேசப்படுவது பற்றியும் தேர்தல் அதிகாரியிடம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் விளக்கம் கேட்டுள்ளார்.

அடையாளக் கார்டு கொண்டு வந்தால்தான் வாக்குச் சாவடிக்குள் அனுமதிக்கப்படும் நிலை இருந்தால் ஒரே கார்டை ஒரு குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் மாறி மாறி "கியூ"விலநின்று கொண்டு வருவதற்கு தாமதம் ஏற்படாதா என்றும் கேட்கப்பட்டது.

அதற்குத் தேர்தல் அதிகாரி அளித்த பதிலாவது:-

"இந்த அடையாள கார்டு வழங்கப்பட்டிருப்பதற்கும், வாக்குச் சாவடிக்குள் வாக்காளர்கள் அனுமதிக்கப்படுவதற்கும் சம்பந்தமில்லை. அதிகாரிகளால் வழங்கப்பட்டிருக்கும இந்த அடையாளக் கார்டை வாக்குச் சாவடிக்குள் கொண்டு வர வேண்டிய அவசியமில்லை. வழக்கம் போல் வேட்பாளர்களோ, அவர்களுடைய ஆதரவாளர்களோகொடுக்கும் சீட்டை (வாக்காளர் பட்டியலிலுள்ள வரிசை எண், பெயர் முதலியன எழுதப்பட்ட சீட்டை) கொண்டு வந்தாலே போதுமானது.

அந்த சீட்டைப பார்த்து ஓட்டுப் போடுவதற்கு வாக்காளர்கள் அனுமதிக்கப்படுவர்.

---

## சிறுமுகையில் மேதின விழா

சிறுமுகை, மே 7—

கோயமுத்தூர் மாவட்டம் சிறுமுகையில் மே தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது- மே தின விழாவுக்கு, சிறுமுகை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியும், விஸ்கோஸ கிளையும், சவுத் இந்திய விஸ்கோஸ் தொழிலாளர் சங்கமும் கூட்டாக ஏற்பாடு செய்தன.

விழாவின முன்னிட்டு சிறுமுகை நகரம், செங்கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. மே 1-ந் தேதி காலையில் எஸ். ஐ. வி, சி, தொழிற்சங்கத்து முன்புறம், தொழிற்சங்க உபதலைவர் தோழர் எஸ். எம். லட்சுமணன் செங்கொடியை ஏற்றி விழாவினை தொடங்கி வைத்தார். கட்சி அலுவலகம் முன், கட்சிக் கொடியை விஸ்கோஸ் கிளைச்செயலாளர் தோழர் என். விநாயகம் ஏற்றி வைத்தார். பின் இனிப்புக்கள் வழங்கப்பட்டது.

அடுத்த நிகழ்ச்சியாக, ஜீவா திடலில் விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றது. போட்டியில் ஏராளமான சிறுவர், சிறுமியரும், பெரியவர்களும் பங்கு கொண்டனர்.

மாலை 4-30 மணிக்கு தாரை, தப்பட்டை, கொம்புகள் முழங்க, 600-க்கு மேற்பட்ட தொழிலாளர், விவசாயிகள், பொதுமக்கள் கலந்துகொண்ட ஊர்வலம் நடைபெற்றது- ஜீவா திடலில் தோழர் எஸ. எம். லட்சுமணன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது. விஸ்கோஸ் கிளைச்செயலாளர் தோழர் எஸ். கே. கண்ணுசாமி, எஸ். ஐ. வி. தொழிற்சங்க உதவிச் செயலாளர் தோழர் ஜி. கிருஷ்ணன் ஆகியோர் அரசியல் நிலைமைபற்றி விரிவாகப் பேசினர்.

# செம்மலர்

(மே மாதம்)

**வெளிவந்து விட்டது!**

வரலாற்றுச் சிறப்பு மிக்க மாறுதல்கள் — தலையங்கம்
குமரன் ஆசான் — வாழ்க்கைக் குறிப்பு
ஜென்னி மார்க்சின் தியாக வரலாறு — பாப்பா உமாநாத்
திண்டுக்கல் தேர்தல் — கே. எம்.
கவிதை
வக்கிரம் — தணிகைச் செல்வன்
சிறு கதைகள்
பிரக்ஞை — டி. செல்வராஜ்
அவன் அறியாதது — சந்திரமூலரசன்
பற்று — அஸ்வகோஷ்
மறுப்பு விமர்சனம்
ஜூடாஸ் காரியோத்தின் கடைசி முத்தம் — பிராமிதியஸ்
தாகம் (நாவல்) — கு. சின்னப்ப பாரதி
விஞ்ஞானக் கட்டுரை
விண்ணும்—மண்ணும் — நெல்லைச் செல்வன்

மேலும் பல சிறப்பு அம்சங்களையும் தாங்கி, மே மாதச் செம்மலர் வெளி வந்துவிட்டது!

முற்போக்கு இலக்கியப் படைப்புகளை வழங்கும் செம்மலர் இதழை இன்றே வாங்கிப் படியுங்கள்!

1 ஆண்டுச் சந்தா ... ரூ. 6—00
6 மாதச் சந்தா ... ,, 3—00
தனிப் பிரதி 0—50 காசு

# நிலங்களை எவ்வாறு அரசு உடைமை ஆக்கினார்கள்

## தொழில்கள் வளர, வாழ்க்கை உயர வழி வகுத்த லெனின் சாதனை

மாஸ்கோ, மே. 7—

சோவியத் யூனியனின் வடக்கேயுள்ள பெரென்ட்ஸ் கடலில், கிஸ்லயா குபா விரிகுடாவில், சென்ற நான்காண்டுகளாக ஒரு கடலலை மின் உற்பத்தி நிலையம் இயங்கி வருகிறது. அந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு, சோவியத் விஞ்ஞானிகள் தற்போது சோவியத் நாட்டில் வடமேற்கிலுள்ள வெண்கடலிலும், கீழ்க்கோடியில் ஜப்பானுக்கு வடக்கேயுள்ள ஓகோட்ஸ்க் கடலிலும் அலை மின் உற்பத்தி நிலையங்களை அமைக்கத் திட்டமிட்டுள்ளனர், பரீட்சார்த்தக் கணக்கீடுகளின்படி, வெண்கடலிலிருந்து 4000 கோடி கிலோவாட் மணியும், ஓகோட்ஸ்க் கடலிலிருந்து 17000 கோடி கிலோவாட் மணியும் உற்பத்தி செய்யப்பட முடியும் என்று பல ஆண்டுகளுக்கு முன்னரே தெரிய வந்த போதும் கூட, நடைமுறையில் இதனை எப்படிச் செயல்படுத்துவது என்ற சிக்கல் இருந்தது.

### செலவுப் பிரச்னை

பிரெஞ்சு கடலலை மின் உற்பத்தி நிலையம், அலைகளின் ஆற்றலை மின் சக்தியாக மாற்ற முடியும் என்பதை உறுதிப்படுத்தியுள்ளது. ஆனால், அதே நேரத்தில் பிரெஞ்சு அனுபவம், பிற வழிகளில் மின்சாரத்தை உற்பத்தி செய்வதைக் காட்டிலும், கடலலைகளிலிருந்து உற்பத்தி செய்வது செலவு அதிகம் என்பதையும் எடுத்துக் காட்டிற்று. கடலில் 39 கிலோ மீட்டரிலிருந்து 100 கிலோ மீட்டர் தூரத்திற்கு அணைகள் கட்டுவது, பொருளாதார ரீதியாக சாத்தியமதானா என்று விஞ்ஞானிகள் சிந்தித்தனர்.

### செலவு குறைவான கடலிலே மின் நிலையம்

பொருளாதார ரீதியாக சாத்தியமான மின் உற்பத்தி நிலையத்தை அமைக்க சோவியத் விஞ்ஞானிகள் திட்டமிட்டனர். கடலருகேயுள்ள தொழில் நகரமான மூர்மான்ஸ்க்கில், கஸ்லயா குபா கடலலை மின் நிலையம் கட்டப்பட்டது. அந்த நிலையம் அங்கிருந்து, குடாவுக்கு இழுத்துச் செல்லப்பட்டது; நீருக்கடியே ஏற்கெனவே போடப்பட்டிருந்த அஸ்திவாரத்தின் மீது அது பொருத்தப்பட்டது. கடலலை மின் உற்பத்தி நிலையம் அமைப்பதில் அது புதிய தொரு முறையாகும். இவ்வகையில், சாதாரண நீர் மின் நிலையங்களை ஆற்றின் குறுக்கே அமைப்பதற்கு ஆகும் செலவைக் காட்டிலும குறைவாகவே ஆகிறது.

கிஸ்லயா குபாவில் அமைக்கப்பட்டுள்ள கடலலை மின்நிலையம் அதிக எண்ணிக்கையில் 'டர்பைன்'களைக் கொண்டது. எனினும் அதை நிர்மாணிப்பதற்கு ஆகும் செலவு குறைவே.

16,000 கோடி கிலோவாட் மணி மின் சக்தியை தயாரிப்பதற்கான வெண் கடல் கடலலை மின் உற்பத்தி நிலையத்தை உருவாக்கும் பணியில் சோவியத் விஞ்ஞானிகள் ஈடுபட்டுள்ளனர். நவீன தொழில் நுட்பவியல் வளர்ச்சியைக் காணும் போது, இது அத்துணை கடினமானது அல்ல தான். எனினும் இவ்வகையில் உற்பத்தி செய்யப்படும் மின்சக்தியை 1500 கிலோ மீட்டர்களுக்குமேல் கொண்டு செல்வதில் பல விதகஷ்டங்கள் ஏற்படுகின்றன. எனவே, இவ்வகையில் உற்பத்தி செய்யப்படும் மின்சாரம். உற்பத்தி ஸ்தலத்திற்கு அருகிலேயே பயன்படுத்தப்படும், இந்த நிலையம் கட்டி முடிக்கப்படும் காலத்தில், மின்சாரத்தை நெடுந்தூரத்திதகுக் கொண்டு செல்வதில் உள்ள பிரச்னைகளும் ஒருவேளை தீர்க்கப்பட்டு விடலாம்.

# குன்னூரில் மத்திய அரசு ஊழியர்கள் ஊர்வலம்

குன்னூர், மே. 7—

மத்திய அரசு ஊழியர் மகா சம்மேளனத்தின் அறைகூவலை ஏற்று "நீலகிரி மத்திய அரசு ஊழியர் இணைப்புக் குழு"வின் சார்பில் மேதினம் 'ஒற்றுமை தின'மாகக் கொண்டாடப்பட்டது.

மே 1-ந்தேதி அன்று குன்னூரிலுள்ள தபால்—தந்தி இரயில்வே ஊழியர்கள் அனைவரும் ஒற்றுமை தினச் சின்னம் அணிந்து அலுவலகம் சென்றனர்.

ஒற்றுமை தினம் சி ஐ டி யூ. ஏ ஐ டி யூ சி, எச். எம் எஸ், ஐ என் டி யூ சி, முன்னேற்றச் சங்கம், முன்னணிச்சங்கம் போன்ற தொழிற் சங்கங்களுடன் இணைந்து கொண்டாடப்பட்டது.

மத்திய அரசு ஊழியர்கள் இணைப்புக் குழு எடுத்த முன்முயற்சி காரணமாக அனைத்துத் தொழிற்சங்கங்களும் ஒன்ருக இணைந்து மேதினம் கொண்டாடும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி வெற்றிகரமாக நடந்தேறியது.

### உணர்ச்சிமிகு கோஷங்கள்

மாலை 5—30 மணிக்கு இரயில் நிலையத்திலிருந்து புறப்பட்ட மாபெரும் ஊர்வலத்தில், குன்னூரிலுள்ள அனைத்து மத்திய அரசு ஊழியர்களும், அருவங்காடு வெடி மருந்துத் தொழிற்சாலை ஊழியர்களும், மற்றும் சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி, எச் எம் எஸ் போன்ற தொழிற் சங்கங்களைச் சேர்ந்த தேயிலைத் தோட்டத் தொழிலாளிகளும், மற்ற தொழிலாளிகளும் தங்கள் தங்கள் சங்கக் கொடிகளுடன் பெருமளவில் கலந்து கொண்டனர். சுமார் 350-க்கும் அதிகமான தொழிலாளர்கள் கலந்து கொண்ட இந்த ஊர்வலம்-சிக்காகோவிலும், பிகானீரிலும், பதான்கோட்டிலும் தங்கள் இன்னுயிரை ஈந்து, தொழிற்சங்கக் கொடிகளுக்கு சிவப்பு நிறமேற்றிய தியாகிகளை வாழ்த்தியும், மே தினம் வாழ்க என்றும் உணர்ச்சி மிகுந்த கோஷங்களை விண்ணதிர முழங்கிக்கொண்டும் பொதுக் கூட்டம் நடைபெறும் வி. பி. தெருவை அடைந்தது.

ஒற்றுமை தினப் பொதுக் கூட்டத்திற்கு, மத்திய அரசு ஊழியர் இணைப்புக் குழுவின் தலைவர் தோழர் பி. வேணுகோபால் தலைமை வகித்தார். மே தினத்தின் சிறப்பை விளக்கியும், அரசின்பிற்போக்குப்பொருளாதாரக் கொள்கையைச் சாடியும், தொழிலாளர் ஒற்றுமையை வலியுறுத்தியும் தோழர்கள் மனோவா (ஏ ஐ டி யூ சி), கே. ராஜன் (சி ஐ டி யூ). மாணிக்கம் (முன்னேற்ற சங்கம்), பால சுப்பிரமணியம் (எச் எம் எஸ்), சிங்கம்(முன்னணிச் சங்கம் குப்புசாமி (ஐ என் டி.யூ.சி:)நபீகான் (டி. ஆர். இ.யூ) ஆகியோர் பேசினார்.

பின்னர் மத்திய அரசு ஊழியர் இணைப்புக்குழுவின் பொதுச் செயலாளர் தோழர் எஸ். மோகன்தாஸ் நன்றி நவில, கூட்டம் இனிதாக முடிவடைந்தது.

# வால்ப்பாறை தோட்டத் தொழிலாளர்...

(பக்கத் தொடர்ச்சி)

தொழிலாளர்கள் மறுத்து விட்டார்கள்.

தொழிலாளர்களின் கோரப்பிடியிலிருந்து தப்பித்த அந்த சங்கத்தலைவர்கள் மறுநாளே வேலைநிறுத்தத்தைப் பற்றி தவருகவும், சி ஐ டி யூ.க்கு எதிராகவும் பேசும் கேடுகெட்ட வழியை கடைபிடித்தார்கள்.

### தி. மு. க. விலிருந்து விலகிய ஊழியர்

பிச்சை என்னும் ஒரு முக்கியமான நீண்டகால தி மு. க. ஊழியர் தி மு க சங்கத்தை விட்டு வெளியேறி சி ஐ டி யூ சங்கத்தில் சேர்ந்தது ஏன் என்பதை பற்றி கூறும போது அவர் சொன்னர்,

"முந்தின நாள் போராட்டத்தை தொடரவும் மறுநாளே போராட்டத்தை மறுத்ததும் ஏன் என்று என்னுடைய தலைவரைக் கேட்டபோது அவர்சொன்னர், 'நீ என்னிடமிருந்து என்ன எதிர் பார்த்தாய்? சாகடிக்கப்பட்ட உரிமையும், ஒபபந்தத்தையும் ஏற்றுக் கொள்ளுமாறு அந்த நெருக்கடியான நேரததில் அறிவுரை கூறுவதா?" என்ருர் அவர் மீது நான் அருவெருப்பு கொண்டேன். என்கிருர் பழைய தி, மு. க. ஊழியர்.

அமைச்சரின் முன்பு ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டுவிட்ட ஏ. ஐ. டி. யூ. சி. தலைவர்கள் கடுகடுப்பாக இருந்தார்கள். இருக்கத்தானே செய்வார்கள். அவர்கள் தொழிலாளர்களின் மனப் போக்கையும், ஒத்துக் கொண்ட ஒப்பந்தத்தை தொடர்ச்சியாக ஒப்புக் கொள்ளுவதனல் ஏற்படும் மொதத நஷ்டத்தையுமஉணர்ந்துகொண்டு ஒப்பந்தத்திற்கு எதிராக போராட்டத்தில் இணைந்து கொண்டனர்.

### ஒரு தொழிலாளியின் பார்வையில்

இந்த போராட்டம் சம்பந்தமாக ஒரு தொழிலாளி விமர்சித்தபோது அவர் கூறுகிருர், "எல்லாத் தொழிற்சாலைகளில் நடைபெறும் போராட்டங்களில் வால்பாறையில் நீண்ட காலமாக இருந்து வரும் நான் பார்த்த இந்தப் போராட்டம்தான் மிகமிக இயற்கையாக எழுந்துள்ளது. இந்தப் போராட்டத்தை தொழிலாளிகளின் ஒற்றுமையின் மீது பயங்கொண்டோரும், வாழ்ந்த வாழ்க்கை மீது ஆசை கொண்டோருமான பெரிய தொழிற்சங்கத் தலைவர்களின்மீதேபோராட்டம் சுமத்தப்பட்டது" என்கிருர்.

1967-ல் நடைபெற்ற பெரும் போராட்டத்திற்குப் பிறகு ஒரு நீண்ட கால அமைதிக்குப்பிறகு தொழிலாளர்களிடையே ஏற்பட்ட கட்டுப்பாடுள்ள தீவிர உணர்வு தோட்ட முதலாளிகளுக்கு தொல்லை கொடுக்கக் கூடியதாகவும் மனக் கவலையை உண்டாக்கக்கூடியதாகவும் இருந்தது.

இது சம்பந்தமாக ஒரு எஸ்டேட் மேனேஜர் ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகை நிருபரிடம் மிகவும் வருத்தப்பட்டு கீழ்க்கண்டவாறு கூறினர்: 'எங்களுடைய நேரத்தின் பெரும் பகுதியை புகார்களை விசாரிப்பதிலேயே செலவிடுகிருேம். ஓய்வு என்ற பழக்கமே முற்றிலும் இல்லாமல் போய்விட்டது. 10 ஆண்டுகளுக்கு முன்புகூட நாங்கள் வேலையைப் பற்றி கவலைப்பட்டது கிடையாது. மதியத்திற்குப் பிறகு 4 மணிக்கெல்லாம் வேலை முடியும். குளித்து விட்டு பந்து விளையாட போய்விட முடியும். ஆனல், இன்ருே எஸ்டேட்டை விட்டு வெளியே போவதே கஷ்டம். வேட்டையாடுதல், சுடுதல், மீன் பிடித்தல் என்பதெல்லாம கடந்துபோன காலமாக இருக்கிறது. பந்து விளையாடுவது என்பது வாரத்தின் கடைசி நாள் தான் முடியும்.

ஆனமலையில் உள்ள 33 எஸ்டேட்டுகளில் 27 எஸ்டேட்களில் 100 சதவீதத் தொழிலாளர்களும் உணர்வோடு பங்கு கொண்டனர். மீதித் தோட்டங்களில் 25 சதவீதத்திலிருந்து 75 சதவீதம் வரை உள்ள தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லவில்லை. இப்படிப்பட்ட நிலைகளில் இப்படிப்பட்ட உணர்ச்சி மிகு போராட்டங்கள் நடைபெறுங் காலத்தில் வழக்கம் போல போலீசாரின் குண்டாந்தடிகளும், கண்ணீர் புகைக் குண்டுகளும் மற்ற ஏனைய கொடிய அடக்குமுறைகளும கட்ட விழ்த்து விடப்பட்டன.

### கருங்காலி வேலை செய்த எம் எல் ஏ

அடக்குமுறை வேலை நிறுத்தத்தை அடக்க முடியவில்லை. ஸ்தல தி. மு, க, எம். எல். ஏ. தொழிலாளிக்கு எதிரான கருங்காலி வேலையில் ஈடுபட்டுங் கூட அவருடைய மனைவியார் தொழிலாளர்களின் போராட்ட ஊர்வலத்திற்கே தலைமை தாங்கி நடத்தினர்.

அடக்குமுறை அதன் உச்சநிலையை அடைந்தது. ஒவ்வொரு தொழிற்சங்கவாதிகளும் கைது செய்யப்பட்டனர். சிஐடியூ ஆபீசுக்கு வந்தவர்கள் யாரும் கைதாவதிலிருந்து தப்ப முடியவில்லை. எனினும் வேலைநிறுத்தப் போராட்டம் தொடர்ந்து வெற்றிகரமாக நடந்தது. போலீஸ் அடக்குமுறைகளை கண்டித்தும போராட்டங்கள் நடந்தன.

போராட்டத்தின் வலிவான போக்கை கண்ட பின்பே, முதலமைச்சர் கேரளாவில் கொடுக்கப்படும் சம்பளங்களுக்கு சமமாககொடுக்கப்படும் என்ற உறுதி அளித்தார். அதன் அடிப்படையில் போராட்டம் வாபஸ் பெறப்பட்டது.

1973 ஜனவரி 4-ல் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி, தமிழ்நாட்டுத் தோட்டத் தொழிலாளிகளில், ஆண்களுக்கு ரூ 3-15க்கு பதிலாக ரூ 3-50 பெண்களுக்கு ரூ 2-45க்கு பதிலாக ரூ 2-90 தரப்படும என்றும், 1974லிருந்துறுக்கு 15 பைசா அதிகரிக்காளொன்கப்படும் என்றும் ஒப்பந்தம் ஆனது.

### பெருகிவரும் சி ஐ டி யூ வின் பலம்

மிகக்குறைந்த எண்ணிக்கை மெம்பர்களைக் கொண்ட சி ஐ டி யூ போராட்ட காலத்தில் அதன் வளர்ச்சி வேகம் அதிகரித்தது. ஏனென்ருல் போராட்ட காலங்களிலும், நெருக்கடி நேரங்களிலும் தோளோடு தோள் கொடுக்கும் தோழன் சி ஐ டி யூ தான் என்பதை தொழிலாளர்கள் உணர்ந்தனர்.

வழக்கமாக சங்கங்களுக்கான சந்தாக்களை, நிர்வாகத்தினரே எடுத்துக்கொள்வதால், அதை இனிமேல் சி ஐ டி யூ சங்கத்திற்கு சந்தாவாக அளிக்கும்படி தொழிலாளிகள் கூறினர். நிர்வாகம் மறுத்துவிட்டது. அதுமட்டுமின்றி சி ஐ டி யூ ஊழியர்கள் பல வழிகளில் பலி வாங்கப்படவிருக்கிருர்கள்.

ஆனல். அவர்களும், தொழிலாளர்களும் இம் முதலாளிகளின் சொர்க்க வாழ்க்கையும், சுகபோக வாழக்கையும் முடியப் போகிற காலம் நெருங்குகிறது என்பதையும் ஒன்றுபட்ட உழைக்கும்மக்களின் தீவீரமான உணர்வும், பலமும் கொண்ட உழைக்கும் மக்களின் சக்தியை இந்த முதலாளிகள் சந்திக்கும் காலம்வரத்தான் போகிறது என்பதையும் அறிவார்கள்.

—"ராடிக்கல் ரெவியூ"யில் வெளியான கட்டுரை

# கடல் அலை ஆற்றலைக் கொண்டு மின்சார உற்பத்தி செய்ய முடியும்

## சோவியத் விஞ்ஞானிகளின் சாதனை

மாஸ்கோ, மே 7—

1917 அக்டோபர் புரட்சிக்குப் பின்னர், சோவியத் அரசு ஆட்சிக்கு வந்த இரண்டாவது நாளில், சோவியத் யூனியனில்நிலங்களைத் தேசியமயமாக்கும் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

சோவியத் யூனியனில் நிலங்களில் தனிஉடைமை முறை ஒழிக்கப்பட்டு, அனைத்து நிலங்களும் அரசுடைமையாக்கப்பட்டன. அதன் பினனர், விவசாயிகளுக்கு முன்பு சொந்தமாக இருந்த நிலங்களும், பெரிய பணணை நிலங்களும் விவசாயிகளின் சாகுபடிக்கு விடப்பட்டன. சுமார் 15 கோடி ஹெக்டார் (1 ஹெக்டார் எனபது சுமார் $2\frac{1}{2}$ ஏக்கர்) பரப்புள்ள நிலப்பிரபுக்களின் நிலங்கள், எவ்வித நஷ்டஈடும்இல்லாமல், விவசாயிகளிடம் விநியோகிக்கப்பட்டன. விவசாயிகளின் குத்தகைக் கடன்கள் ரத்து செய்யப்பட்டன.

சொத்துக்கள் அரசுடமை ஆக்கப்பட்டதாலும், நிலங்களை வாங்கலும், விற்றலும் தடை செய்யப்பட்டதாலும தனி நபர்களின் கையில் நிலங்கள் குவிந்திருக்கும் வாய்ப்பு அறவே அகற்றப்பட்டது. கிராமப்புறத்தில் மனிதனை மனிதன் சுரண்டும் முறைக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

நிலங்கள் தேசிய மயம் ஆக்கப்பட்டதால், விவசாயத் துறையில் விரிந்த அளவில் நவீன உற்பத்தி முறை உருவாக்கப்பட்டது முன்னுளில் நிலப்பிரபுக்களால் அபிவிருதத்தி செய்யப்பட்ட பெரிய பண்ணைகள், அரசாங்கப் பண்ணைகளாக மாற்றப்பட்ன.நிலம தேதிய மயம ஆக்கப்பட்டதால், விவசாயக கூட்டுறவுகள் உருவாக்கப்பட்டன.

### தொழில் மயமாக்கலுக்கு உதவி

1917 ஆம ஆண்டுக்கு முன்னர், ரஷ்யாவின் தொழில் துறை பலவீனமாக இருந்தது. நிலம்தேசியமயமாக்கப்பட்டதால் அதன் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலைகள் உருவாயின: மக்களின் வாழ்க்கைத்தரமும் உயரத் தொடங்கியது. நிலம தனியுடைமையாக இருக்கும் பொழுது, தொழிற்சாலைகளுக்கும். ரயில்வேக்களுக்கும், நெடுஞ்சாலைகளுக்கும் தேவையான நிலங்களை வாங்குவதற்கு ஏளமான பணத்தையும், காலத்தையும் செலவிட வேண்டியுள்ளது.

நிலம் தேசியமயமாக்கப்பட்டதால், சீரிய முறையில் விளைச்சலை அதிகரிக்க முடியும் எளிய முறையில் நிலத்தைப் பயன்படுத்த முடியும். இதன் விளைவாக, குறைந்த செலவில்தொழில் துறையை வளர்க்க முடியும்.

நிலத்தைத் தேசியமயமாக்கியதால், சோவியத் யூனியனிலுள்ள சிறுபான்மை தேசிய இனங்கள், நிரம்ப ஆதாயம் அடைந்துள்ளன. பல்வேறு தேசிய இனங்களைக் கொண்ட மத்திய ஆசியாவில், நீர்ப்பாசனம் இருந்தால்தான் உழுது பயிட முடியும். ஆனல், நிலம் தனியுடைமையாக இருந்த காலத்தில் (1917 அக்டோபர் புரட்சிக்கு முன்பு), பெருமளவில் நீர்ப்பாசன வேலைகளை நிறைவேற்ற முடியவில்லை.

### வாழ்க்கை உயர்ந்தது

மத்திய ஆசிய விவசாயிகளின் பொருளாயத ஆற்றல், மிகக் குறுகிய காலத்தில் கனிசமாக வளர்ந்துள்ளது. நிலம் தேசியமயம் ஆக்கப்பட்டது தொழில் அபிவிருத்தி செய்யபபட்டது. ஆகியவையே இதற்குக் காரணமாகும்.

சோவியத் ஆட்சிக்காலத்தில் மத்திய ஆசியா, மகத்தான முன்னேற்றம் கண்டுள்ளது. மத்திய ஆசிய மக்கள், சோவியத்யூனியனிலுள்ள தமது சகோதர தேசிய இனங்களின் உதவியுடன் மிகப் பெரிய அணைகளையும், கால்வாய்களையும் கட்டியுள்ளனர். இதன் பயனுக கோடிக் கணக்கான ஹெக்டார் நிலங்களில் விவசாயம் செய்யப்படுகிறது.

### அனுகூலமான சூழ்நிலைகள்

சோவியத் யூனியனில் நிலம் தேசியமயமாக்கப்பட்டதால், நிலத்தின் வளத்தைப் பாதுகாப்பதற்கும், நிலஅரிமானத்தைத் தடுப்பதற்கும், பல நடவடிக்கைகள் எடுக்கப்படுகின் இதற்கு அனுகூலமான சூழ்நிலைகள் ஏற்பட்டு உள்ளன. நிலங்கள் எல்லாம் அரசுக்குச் சொந்தம் என்ற சட்டம் அனைவரையும் கட்டுப்படுத்துவதாகும். சோவியத் நாட்டில் நில வளத்தைப் பாதுகாப்பதற்கும், அதிகரிப்பதற்கும், தொடர்ச்சியாக நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன; எனவே, நிலம் தனிவுடைமையாக இருக்கும் நாடுகளைவிட, சோவியத் யூனியனில் நிலவளம் மிகுதியாக உள்ளது.

### காடுகள் செழித்தன

சோவியத் யூனியனில் நிலத்தின் மீதான தனியுடமை அகற்றப்பட்டுவிட்டல்லாத, காட்டுவளங்களை விஞ்ஞான ரீதியில் சீராகப் பயனபடுத்த முடிகிறது.

சோவியத் நாட்டின் ஐரோப்பிய பகுதியில், மரங்களை வெட்டுவது மிகவும் குறைக்கப்பட்டுள்ளது. காடுகளை மீண்டும் வளர்ப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. நதிகளின் போக்குவரத்தை ஒழுங்கு படுத்துவதற்கும், இந்த நடவடிக்கைகள் உறுதுணையாக விளங்கின்றன.

நிலத்தைத் தேசிய மயமாக்கியதால், நாட்டின் பொருளாதார வளத்தை வேகமாக அபிவிருத்தி செய்வதற்கும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், முன்பு பின் தங்கிக் கிடந்ததேசியச் சிறுபான்மையினரின் பொருளாதார சுதந்திரத்தையும், முன்னேற்றததையும் உறுதிப்படுத்துவதற்கும் சோவியத்யூனியன்ஒரு முக்கிய வழி கண்டுள்ளது.

# கோவை மேற்கில் ஜுலை மாதம் தேர்தல்

கோவை, மே. 7—

கோவை மேறகு தொகுயில் வருகிற ஜுலை மாத இறுதியில் சட்டமன்றத் திற்கான உப தேர்தல் நடைபெறும் என தெரிகிறது.

தி. மு. க. உறுப்பினர் கோபால் மரணம் அடைந்ததால் அங்கு உபதேர்தல் நடைபெறுகிறது.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

இடதுசாரி முற்போக்கான மக்கள்சக்தி ஆட்சியை ஏற்படுத்த இந்த உறவு நீடிக்க வேண்டும்.

திண்டுக்கல் தேர்தலுக்காக மார்க்சிஸ்ட் கட்சி உயிரைக் கொடுத்து அனைத்து தியாகமும் செய்து வேலை செய்யும். இதற்காகத்தான் நாங்களே திதி வசூல் செய்து எங்கள் கட்சியின்செலவில் அ. தி. மு. க. வேட்பாளருக்காக முழு மூச்கடன் தேர்தல் பிரச்சாரத்தில் இறங்கியுள்ளோம்.

இதற்காக அ. தி. மு. க. விடம் ஒன்றையும் எதிர் பார்க்கவில்லை.

இன்றைக்குப்போல் என்றும் இந்திரா காங்கிரசின் மக்கள்விரோதக்கொள்கைகளை எதிர்க்க வேண்டும் என்ற ஒன்றை மட்டும் தான் நாங்கள் இவர்களிடமிருந்து எதிர்பார்க்கிருேம் என்று தோழர் என். சங்கரய்யா பலத்த கர கோஷத்திற்கிடையே பேசி முடித்தார்.

# திண்டுக்கல் தேர்தல்...

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

அந்த அலுவலகத்திற்கு சேதம் ஏற்பட்டது.

தி மு க தேர்தல் அலுவலகம் தாக்கப்பட்டது சம்பந்தமாக 140 அ. தி. மு. க. வினரை போலீஸ் வலைவீசி தேடி வருகிறது என்ற செய்தியை வெளிட்டுள்ளது.

ஆனல் அங்கு உண்மையில் நடந்ததென்ன?

அ. தி. மு. க. ஊழியர் ஆறுமுகம் படுகொலை செய்யப்பட்டதைக் கேட்டு ஆத்திரமடைந்தமக்கள் தி மு க தேர்தல் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர். அப்போது ஏற்பட்ட சிறு தகராறின் விளைவாக தி மு க தேர்தல் அலுவலகத்திற்கு சிறிது சேதம் ஏற்பட்டது. இவ்வளவுதான் நடந்த விஷயம்.

### கொலையும் செய்வேன் கைதும் செய்வேன்

அ. தி மு க ஊழியர் ஆறுமுகம் படுகொலை செய்யப்பட்டது சம்பந்தமாக ஒரே நபர்தான் தேடப்பட்டு வருகிருராம்.

ஆனல் அதே சமயத்தில் தி மு க தேர்தல் அலுவலகம் தாக்கபபட்டது தொடர்பாக 140 பேரை போலீஸ் புலிகள் வலைபோட்டு தேடுகிறதாம். இதற்காகவே ஒரு மாவட்ட போலீஸ் அதிகாரி அங்கு முகாமிட்டுள்ளாரம.

வத்தலக்குண்டு என்ற சிறிய ஊரில் 140 அ தி மு க வினர் கைது என்ருல் என்ன அர்த்தம்?

கொலையும் செய்வேன், அத்தோடு தேர்தல் வேலைகளிலும் அவர்களைக்கலந்து கொள்ளாமல் தடுப்பேன். இது தானே தி மு க ஆட்சியாளர்களின் ஒரு கட்சி சர்வாதிகாரச் செயல்.

இந்தக் கொடுமையை மதுரை மக்களாகிய நீங்கள் அனுமதிக்கப் போகிறீர்களா?

(மாடோம்! மட்டோம்! கூட்டத்தினர்)

### தி மு க வினர் வன்முறை

அண்மையில் உசிலம்பட்டியில் நடைபெற்ற தி மு க பொதுக் கூட்டத்தில் முதலமைச்சர் கருணாநிதி பேசினார். இந்தக் கூடடத்தில் ஆட்கள் இல்லை. அதற்கு யார் என்ன செய்வது?

இதனல் ஆத்திரமடைந்த தி மு க வினர் எம் ஜி ஆர் உசிலையில் பேசிய கூட்டத்தில் கல்லெறிந்துகலாட்டா செய்தனர்.

இந்தக் கூட்டம் நடக்கவிடாமல் கலாட்டா செய்தவர்களின் மீது போலீசார் இதுவரை ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

இதுதவிர பல இடங்களில் கத்தி குத்து சம்பவங்கள். பற்றி தகவல் வந்துள்ளன, இது போன்ற நடவடிக்கைகளின் மூலம் மக்களை பீதியடையச் செய்து வெற்றி பெற்று விடலாம் என்று கனவு காண்கிருர் முதலமைச்சர் கருணாநிதி.

ஆனல் இதில் நிச்சயம் ஏமாறத்தான் போகிருர். அதில் சந்தேகமேயில்லை

இனறு தி. மு. க. வினரும் சிண்டிகேட் காங்கிரசாரும், இந்திரா காங்கிரசாரும் அ. தி. மு. க. விற்கு என்ன கொள்கை இருக்கிறது? இந்தக் கட்சியைப் போய் மார்க்சிஸ்ட் கட்சி ஆதரிக்கலாமா? என்ற கேள்வியை எழுப்பியுள்ளனர்.

அதற்கு எம். ஜி. ஆர் தக்க பதிலளித்துள்ளார். இந்திரா காங்கிரஸ், சிண்டிகேட், தி. மு. க. வின் மக்கள் விரோதக் கொள்கைகளை எதிர்க்கிருேம். ஏகபோக முதலாளிகளையும், அடக்கு முறைகளையும் எதிர்க்கிருேம் என்று அறிவித்துள்ளார்.

இதுதானே இன்று மக்களுக்கு தேவையானது. மார்க்சிஸ்ட் கட்சி இதற்காகத்தானே போராடிக் கொண்டிருக்கிறது.

எனவே இந்தக் கொள்கையில் அ. தி. மு. க. உறுதியாக நிற்க வேண்டும். திண்டுக்கல் தேர்தலுடன் இந்தஉறவு முறிந்து விடக்கூடாது.

### அ தி மு க விற்கு வேண்டுகோள்

சிண்டிகேட், இண்டிகேட்,சுதந்திரா, ஜனசங்கம் போன்ற பிற்போக்குக் கும்பல்களை இந்த நாட்டை விட்டே விரட்டியடிக்கும் வரை இந்த உறவு நீடிக்க வேண்டும்.

தமிழகத்தில் தி.மு.க.வை ஆட்சியைவிட்டே விரட்டியடித்து உண்மையான

(6-ம் பத்தி பார்க்க)

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13-முதல் சந்து, வடக்குச்சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா